ஜூன், 1987

தனிப்பிரதி ரூ. 1 மலர் 18

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 1

# உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

| | | |
|---|---|---|
| முன்னட்டையில் | : | தேசிய அளவில் நடைபெற்ற "அன்னமய்யா இசை விழா"வினைக் குறிப்பிடும் சித்திரம் : கே. ஜெகதீஷ். |
| 2-வது | : | 'அன்னமய்யா ஜெயந்தி' துவக்கநாள் விழா நிகழ்ச்சிகள். |
| 3-வது | : | 'அன்னமய்யா ஜெயந்தி' பிரிவு வாழ்த்துரை விழா நிகழ்ச்சிகள். |
| பின்னட்டையில் | : | 18-வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் 'ஸப்தகிரி'. |

*சிறப்பாசிரியர்.*
திரு. சி.எச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர்.*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

செல்வம், ஞாலம், புலமை, வயது, வலிமை-இவை இருப்பவன் முதல் இல்லாதவன் வரை எல்லோரையும் ஒரு கட்டுக்குள் கொண்டுவிடும் பெருமை ஒரு துறைக்கு மட்டுமே உண்டு. அதுதான் இசை. ஏன், ஆறறிவு இல்லா உயிரினங்களையும் மயக்கும் திறன் அவ்இசைக்கே உண்டு. பிரச்சனைகளை உருவாக்காத ஒரே துறை இசை மட்டுமேயாம். மக்களிடையே ஓர் ஒருமைப்பாட்டு உணர்வினை ஊக்குவிக்கும் வகையில் ஓர் உன்னதமான இயக்கமாக விளங்குவது இசையாகும். மேற்கிந்திய இசைக்கு இந்தியன் தாளமிடுவதும், இந்துஸ்தானி மற்றும் கர்னாடக இசையில் மேலை நாட்டார் தங்களை மறப்பதும் இன்றும் நாம் காணும் ஓர் இனிய அனுபவமாகும். எனினும் இந்திய இசைக்கு, குறிப்பாக கர்னாடக இசைக்கு உள்ள ஏற்றமும் எடுப்பும் இந்திய மண்ணின் பெருமையைப் பறை சாற்றும் வகையில் விளங்குகின்றன. ராக் அண்ட் ரோல், பாப், பீட்டல்ஸ், டிஸ்கோ என்று வரும் மேலைநாட்டு இசை காலத்திற்குக் காலம் மாறிக் கொண்டு, அவர்களைக் குழப்பிக் கொண்டிருக்கையில், பண் தோன்றிய முதல்-பாடல் எழுந்தது முதல், புதியன கொண்டு பழையன கழிதல் இன்றி, அன்று தொடங்கி இன்று வரை சிரிளமையுடன் இசை விருந்தினைத் தந்துவருவது நமது கர்னாடக இசை. இதற்குக் காரணம் இசையும், சமயமும் இணைந்து இருப்பதால்தான். அதனால்தான் இங்கு இசை தெய்விகமாகிறது. சமயத்தால் இசையும், இசையால் சமயமும் பெருமை பெற்ற சிறப்பு இந்திய மண்ணுக்கே உரியது. இம்மண்ணில் சமயப் பிரிவுகள் பல இருந்திடினும், இனச்சிதறல்கள் பல விளங்கிடினும், பண்புக் கூறுகள் பல திகழ்ந்திடினும் மக்கள் ஒரே நீரோட்டத்தில் இருப்பது இந்து சமயத்தின் பெருமையினாலும், இந்திய இசையின் சிறப்பினாலும்தான். மனிதனுக்குச் சிந்திக்கத் தேவையானவை அமைதியான சூழ்நிலையும், மனமும்தான். இசை ஒன்றினால் மட்டுமே இவற்றை வழங்க முடியும்.

இவ்இசையின் அருமையினை உணர்ந்து, தங்கள் மொழிகளில் பாடல்கள் பல புனைந்து பக்திக் கடலில் மூழ்கியோர் பலர். 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்' எனும்படி அவர்தம் பாடல்களின்மூலம் அவர்கள் பெற்ற இறையருள் அனுபவத்தை-இசை இன்பத்தை இன்று பெற்றவர் பலர். ஏன் அவர்கள்தம் வாழ்க்கைச் சக்கரம் சுழலவும் அப்பாடல்கள் பெரிதும் காரணமாக இருக்கின்றன என்பதும் உண்மை. வடக்கையும் தெற்கையும் இணைக்கும் கலாசாரப் பாலமாகத் திகழ்ந்தவர்கள் மீரா, கபீர், புரந்தரர், மும்மூர்த்திகள், சுவாதித் திருநாள், இராமதாஸர், பாபநாசம் சிவன் என்று அவர்கள் பட்டியல் நீளும். ஆண்டுகள் பல நூறு கழிந்தாலும், அவர்கள் இன்றும் நம்மிடையே வாழ்வது அவர்கள்தம் பாடல்களிலேதான். அதற்குக் காரணம், அவற்றில் பொதிந்திருக்கும் பக்திச்சுவை, பொருட்செறிவு, இவற்றைக் கலந்து தரும் இனிய இசைக்குரிய பாவம். புரியாத மொழியில் பாடல் இருந்தாலும், அதைப் புரியும்படித் தெரிவிக்கும் சிறப்புடையது இசை. இதற்குக் காரணம் இசைக்கும் கலைஞர்களேயாயினும், அவ்இசை ஓவியத்திற்கு ஒரு சிலையாக இருப்பது அப்பாடல்கள் தாமே. அத்தகு பாடல்கள் நமக்கு அளித்தவர்களில் ஒருவராக விளங்குபவர் தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாசார்யா அவர்கள்.

மும்மூர்த்திகளுக்கு ஒரு முன்னோடியாக இருந்து ஆயிரக்கணக்கில் பா புனைந்த அந்த 15ம் நூற்றாண்டு இசைக் கவிஞர் 500 ஆண்டுகளுக்குப் பிறகு இன்று சிறப்பைப் பெறக் காரணம், காலம் செய்த சதியேயாம். ஞானிகள், கலைஞர்கள் மற்றும் கவிஞர்களின் சிறப்பை அவர்கள் வாழ்நாளிலேயே மற்றவர் அறியத் தவறும் பண்பு, இந்திய வரலாற்றிற்கே உரிய ஒன்றாகும். அவ்வகையில் அன்னமய்யாவை ஆந்திரம் அறியத் தவறியதில் அதிசயமில்லை. அதனால் அவர் பாடல்கள் பொறிக்கப் பெற்ற ஆயிரக்கணக்கான செப்பேடுகள் காணாமல் போயின. ஆயினும் கலியுக வேந்தனான அவ் நெடியோன் தன் திருவருளை அன்னமய்யாவுக்கும் பொழியவே செய்தான். நூற்றுக்கணக்கான அவர்தம் செப்பேடுகளை தன் இல்லத்திலேயே மறைத்து வைத்துக் கொண்டான், அவை சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர் திருமலைக் கோயில் வளாகத்தில் ஒரு ரகசிய அறையிலிருந்து கண்டெடுக்கப்பட்டன. அவை தெலுங்கு மொழியில் குறிப்பாக கவிதை உலகில் ஒரு மறுமலர்ச்சியினையே தோற்றுவித்தன; மாலவனின் மங்காப் புகழினை எடுத்துக்காட்டின.

இவ்வளமை மிகு, பக்திப் பசி தீர்க்கும் பாடல்களை அகிலம் அறிந்துணர்ந்து உய்வு பெறும் வகையில் அவற்றின் அருமையினைப் பரவலாகச் செய்வது இன்றைய இசைக் கலைஞர்களின் முதற்பணியாகும். கர்னாடக இசைக்குப் பாடல்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற ஒரு நியதிக்குள் தங்களை உள்ளாக்கிக் கொள்ளாமல், சமய உணர்வுகளைத் தட்டி எழுப்பும் இலக்கிய செழுமை மிக்க அன்னமய்ய பாடல்களைத் தக்க பண் கொண்டு, தங்கள் இசை ஞானத்தால் இசைத்தார்களேயானால் அது, இசை உலகிற்கு அவர்கள் ஆற்றும் மாபெரும் தொண்டாக அமையும்.

இதனை மனதிற்கொண்டு தான் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல ஆண்டுகளாக 'அன்னமய்யா நினைவு நாள்' என்றும் 'அன்னமய்யா ஜெயந்தி' என்றும் திருப்பதியிலும் மற்றும் அன்னமய்யா சிறப்பு இசைவிழாக்களை நாட்டின் பல பகுதிகளிலும் தன் இசைத்துறைக் கலைஞர்கள் மற்றும் புகழ்பெற்ற இசைக் கலைஞர்கள் மூலம் நடத்தி வருகின்றது. கடந்த சில ஆண்டுகளாக 'அன்னமய்யா ஜெயந்தி' விழா தேசிய அளவில் புகழ்பெற்ற இந்துஸ்தானி மற்றும் கர்னாட இசைக் கலைஞர்கள் மூலம் நடத்தி வருகின்றது. இவ்வகையில் சென்ற மாதம் நடைபெற்ற இசை விழாவில் பங்கேற்ற இசைக் கலைஞர்களுக்குத் தன் நன்றியைத் தி. தி. தேவஸ்தான மேலாண்மை தெரிவித்துக் கொள்கின்றது. இனி வரும் இசை விழாக்களில் பங்குபெறும் வாய்ப்புப்பெறும் இசை வித்தகர்கள், அவ்அன்னமய்யா பாடல்களைப் பாடுவதைத் தங்கள் இசைப் புலமையைக் காண்பித்திடும் ஒரு 'சவால் முயற்சியாக'வும், நிகழ்ச்சி நடைபெறும் இடங்களை தங்கள் வெற்றிக் களமாகவும் கொண்டு அவ்வேங்கடவன் புகழ்பாடும் பெருமையில் பெரிதே பங்காற்ற வாரீர் என்றே அவர்களை அழைக்கின்றோம்.

# செய்திச் சுருக்கம்

**தெப்போத்சவம் :**

திருப்பதி அடுத்துள்ள திருச்சானூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதித் தாயார் கோயிலின் வருடாந்திர தெப்போற்சவத் திருவிழா, கோயில் அடுத்துள்ள திருக்குளத்தில் 7-6-87 முதல் 11-6-87 வரை 5 நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்படும். முதல் நாளன்று ஸ்ரீ கிருஷ்ண சுவாமியும், இரண்டாம் நாளன்று ஸ்ரீ சுந்தரராஜ சுவாமியும், கடைசி மூன்று நாட்களில் ஸ்ரீ பத்மாவதித் தாயாரும் தெப்பத்தில் விற்றிருந்து பக்தர்களுக்கு அருட்காட்சி வழங்குவர்.

**ஆர்ஜித கல்யாணோற்சவம் :**

திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் ஆர்ஜித கல்யாணோற்சவ முறையினை புகுத்தியுள்ளனர். ஸ்ரீ கோதண்டராமருக்கு கல்யாணோற்சவம் நடத்த விருப்பம் உள்ள பக்தர்கள் ரூ. 200/- செலுத்த வேண்டும்.

**ஜெயந்தி விழா :**

தாள்ளபாக்கம் ஸ்ரீ அன்னமாசார்யாவின் 579வது பிறந்த நாளைக் கொண்டாடும் வகையில் "அனைந்திந்திய ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை விழா" திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 13-5-87 முதல் 19-5-87 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 13-5-87 அன்று காலை ஸ்ரீ அன்னமய்யா மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவப் படங்கள் நகரின் சில முக்கிய வீதிகளில் திருவீதி திருவலம் கொண்டு வரப்பட்டன. பின்னர் தி. தி. தே. ஸ்ரீ அன்னமாசார்யா கலா மந்திரத்தில் இவ்இசைவிழா ஆந்திர மாநில இந்து அறநிலைய அமைச்சர் திரு. என். எத்திராஜராவ் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. அதற்கு முன்னர், விழாவிற்கு வருகை புரிந்த பொது மக்களை, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சிஎச். வெங்கடபதி ராஜு அவர்கள் வரவேற்றார். பின்னர் ஸ்ரீ அன்னமாசார்யா திட்டத்தின் நிகழ்ச்சி ஒத்திசைவாளர் திரு.மேடஸானி மோகன் அவர்களின் ஆண்டறிக்கை வாசிப்பினைத் தொடர்ந்து, விழாத் தலைவரான தி. தி. தே. மேலாண்மை மற்றும் பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் தன் தலைமை உரையில் அன்னமய்யா பாடல்களில் பொதிந்திருக்கும் நீதிக் கருத்துக்கள், பக்தி நுணுக்கங்களை எடுத்துக் காட்டுகளுடன் விளக்கிப் பேசினார். பின்னர் அமைச்சரவர்கள் இசை விழாவினைத் துவக்கி வைக்கும் வகையில் குத்துவிளக்கு ஏற்றினார். பிறகு, தி. தி. தே. வெளியிட்ட ஒலி நாடாக்களை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து, ஸ்ரீ அன்னமாசார்யா சந்ததியினர் இருவருக்கு தி. தி. தே. ஆதரவில் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். பின் தன் திறப்புரையில், அன்னமய்யா கீர்த்தனைகளின் மூலம் 15ம் நூற்றாண்டின் வாழ்க்கை மேம்பாட்டினைச்சுட்டிக்காட்டினார். தொடர்ந்து அன்னமய்யாவின் சமய வரலாற்றை விளக்கிப் பேசி, அவர்தம் பாடல்கள் இன்றைய பக்தி விழிப்புணர்ச்சிக்கு எவ்வகையில் துணை புரியும் என்பதையும் சில பாடல்கள் மூலம் விளக்கினார் பின்னர் தி. தி. தே. பாதுகாப்பு மற்றும் கண்காணிப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெயசந்திரா அவர்கள் நன்றி நவின்றார்.

ஏழு நாட்கள் நடைபெற்ற இவ் இசைவிழாவின்போது, காலையிலும் மாலையிலும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வருகை புரிந்த பல இசைக் கலைஞர்களின் கர்நாடக இசை, நாட்டியம், மற்றும் விளக்க உரைகள் ஆகியன நடைபெற்றன. இவ்விழாவில், திருமதி. பி. ராஜேஸ்வரி ஸ்ரீநிவாஸ் திரு. ஐ. பி. சீதாபதி ராவ், திரு. அன்னவரபு ராமசுவாமி, திரு. ஏ. வி. எஸ். கிருஷ்ணாராவ், திரு. குன்னக்குடி ஆர். வைத்யநாதன், திரு. அர்ர கிருஷ்ணமூர்த்தி குமாரி. ஸ்ரீவாணி, திரு. பஸவ ராஜு சகோதரர்கள், திரு. மகாராஜபுரம் சந்தானம், திருமதி. சாருமதி ராமச்சந்திரன், திரு. சி. சிட்டிபாபு, டாக்டர். என். ரமணி, திரு. நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன், திருமதி. ஆர். சாயாதேவி, திருமதி. சோபா ராஜு மற்றும் பல கலைஞர்கள் பங்கேற்று, திருப்பதி நகரத்தை இசை வெள்ளத்தில் அமிழ்த்தினர். இவ்விழா நாட்களின்போது, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள் திருவாளர்கள், டாக்டர். என். தேவநாதன், சி. ஆனந்தராவ், சி. சத்ய நாராயண ராவ், ஐ. எல். என். சாஸ்திரி, பி. ராமசந்திர ராஜு, எல். வி. ராமய்யா, திருமதி. ராஜலட்சுமி மற்றும் பலர் சிறப்பு விருந்தினர்களாக பங்கேற்று சிறப்பித்தினர்.

19-5-87 அன்று நடைபெற்ற விழாவின் 'பிரிவு வாழ்த்துரை' நிகழ்ச்சி நடைபெற்றது. இவ்விழாவிற்கு சித்தூர் மாவட்ட முதல்வர். திரு. பி. ஆர். கே. பரமஹம்ஸா அவர்கள் தலைமை வகித்தார். திருப்பதியில் உள்ள மகளிர்ப்பல்கலைக்கழகத் துணை வேந்தர் திருமதி. கோலா. ராஜ்யலக்ஷ்மி அவர்கள் சிறப்பு விருந்தினராக இவ்விழாவில் பங்கேற்றார்.

**உண்டியில் :**

திருமலைக் கோயில் உண்டியலில் இம்மாதம் 8 மற்றும் 9 தேதிகளில் பக்தர்கள் இருவர் தனித்தனியாக ரூ. 2.5 இலட்சரூபாய் கட்டுக்களை ஒரு பிளாஸ்டிக் உறையில் வைத்து காணிக்கையாகச் செலுத்தியிருந்தனர்.

(48-ம் பக்கம் பார்க்க



நிலையத்திலிருந்து வடக்காக நடந்தால் நாலைந்து நிமிடங்களிலேயே சந்நிதித் தெருவிற்கு வந்து விடலாம். ஏழு அடுக்குகளுடன், எழில் வடிவச் சுதைச் சிற்பங்களுடன் கூடிய, தரை மட்டத்திலிருந்து 138 அடி உயரமான ராஜகோபுரம் கோயிலுக்கு மட்டுமே அல்லாது, திருப்பதி நகரத்திற்கே அழகு தருவதாய் விளங்குகின்றது. அதன் உச்சியில் பதினொரு பொன் முலாமிட்ட கலசங்கள் கதிரவனொளியில் மிளிரும். கோயிலின் முகப்பிலேயே அமைந்திருந்தாலும், இக்கோபுரம் என்னவோ கி. பி. 1628 ஆண்டுவாக்கில்தான் தேவசோட குடும்பத்தைச் சேர்ந்த மட்லி குமார அனந்தராஜன் என்னும் சிற்றரசனால் கட்டப்பட்டதாகும். கல்லினாலான அடித்தளக் கட்டிடத்தில் புராணக் கதைக் காட்சிகளின் படைப்புச் சிற்பங்கள் நம் கண்களை விட்டு அகலா.

# திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜர்

''குறைவொன்றுமில்லாத
கோவிந்தா!''
'கூடாரை வெல்லும் சீர்க்
கோவிந்தா!'
'கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்,
கோவிந்தா! கோவிந்தா!'

பசுக்களாகிய மாந்தர் அனைவரையும் பரிவுடன் பாதுகாப்பவன் என்னும் கருத்தில் பக்தர்களினால் பரவசத்துடன் கொண்டாடப் பெற்று வரும் விஷ்ணு மூர்த்தம் 'கோவிந்தன்!'. எனவே, எப்போதும்

'கோவிந்தேதி ஸதா ஸ்நானம்
கோவிந்தேதி ஸதா ஜபம்
கோவிந்தேதி ஸதா த்யானம்
ஸதா கோவிந்தேதி கீர்த்தனம்!'

என்றவாறாக, அவன் நாமத்தைப் பண்டிதரும் பாமரரும் உரத்தக் குரலில் விளித்தழைத்துப் பாதுகாப்புணர்ச்சியைப் பெறுவதில் வியப்பு ஏதுமில்லை!

அத்தகையதோர் அரிய பெயர்ப் பெருமையினையுடையவர் 'அரவணையிற் பள்ளி கொள்ளும் கோ' ஆகிய தில்லைக் கோவிந்தராஜப்பெருமாள். தில்லைச் சித்திரக்கூடத்திலிருந்து அலைகடலில் எடுத்தெறியப்பட்டதாகச் சொல்லப்படும் அப்பெருமாள் ஏழுமலையின் அடிவாரத்தில் அமைந்திருந்த யாதவப் பெருமாளின் ஆலய வளாகத்தில் குடியேற்றப்பட்டார்! இதில் மேலும் வியப்பு என்னவெனில், அவ்வாலயத்தின் பெயரே 'கோவிந்தராஜர் கோவில்' என மாற்றம் பெற்றதாகும்!

ஊருக்குக் கிழக்குப் பகுதியிலிருந்து தொலைவில் வரும்போதே நம்மைக் கவருவது மாபெரும் ராஜகோபுரம். திருப்பதி கிழக்கு இரயில் இங்கேயே நின்று விடாமல், இரண்டு இடைநிலைக் கோபுரங்களைத் தாண்டி, நேராக முதலில் கோவிந்தராஜர் சந்நிதிக்குச் சென்று முதலில் சேவித்து விடுவோம். போகும் போது சில விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம்.

---

திரு. அ. நடராஜன் — திருப்பதி.

---

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழ நாட்டை ஆண்டு வந்த குலோத்துங்கன் சைவப்பற்று மிக்கவனாக விளங்கினான். தில்லையிலுள்ள நடராஜர் கோவிலில் சித்திரக்கூடத்தில் இருந்த கோவிந்தராஜரின் விக்கிரகத்தைக் கடலில் எறிந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. இதைக் கேட்டு வருந்திய இராமானுஜர் அவ்

# செய்திச் சுருக்கம்

**தெப்போற்சவம் :**

திருப்பதி அடுத்துள்ள திருச்சானூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதித் தாயார் கோயிலின் வருடாந்திர தெப்போற்சவத் திருவிழா, கோயில் அடுத்துள்ள திருக்குளத்தில் 7-6-87 முதல் 11-6-87 வரை 5 நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்படும். முதல் நாளன்று ஸ்ரீ கிருஷ்ண சுவாமியும், இரண்டாம் நாளன்று ஸ்ரீ சுந்தரராஜ சுவாமியும், கடைசி மூன்று நாட்களில் ஸ்ரீ பத்மாவதித் தாயாரும் தெப்பத்தில் விற்றிருந்து பக்தர்களுக்கு அருட்காட்சி வழங்குவர்.

**ஆர்ஜித கல்யாணோற்சவம் :**

திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் ஆர்ஜித கல்யாணோற்சவ முறையினை புகுத்தியுள்ளனர். ஸ்ரீ கோதண்டராமருக்கு கல்யாணோற்சவம் நடத்த விருப்பம் உள்ள பக்தர்கள் ரூ. 200/- செலுத்த வேண்டும்.

**ஜெயந்தி விழா :**

தாள்ளபாக்கம் ஸ்ரீ அன்னமாசார்யாவின் 579வது பிறந்த நாளைக் கொண்டாடும் வகையில் "அனந்திந்திய ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை விழா" திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 13-5-87 முதல் 19-5-87 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 13-5-87 அன்று காலை ஸ்ரீ அன்னமய்யா மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவப் படங்கள் நகரின் சில முக்கிய வீதிகளில் திருவீதி திருவலம் கொண்டு வரப்பட்டன. பின்னர் தி. தி. தே. ஸ்ரீ அன்னமாசார்யா கலா மந்திரத்தில் இவ்இசைவிழா ஆந்திர மாநில இந்து அறநிலைய அமைச்சர் திரு. என். எத்திராஜராவ் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. அதற்கு முன்னர், விழாவிற்கு வருகை புரிந்த பொது மக்களை, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எச். வெங்கடபதி ராஜு அவர்கள் வரவேற்றார். பின்னர் ஸ்ரீ அன்னமாசார்யா திட்டத்தின் நிகழ்ச்சி ஒத்திசைவாளர் திரு.மேடஸானி மோகன் அவர்களின் ஆண்டறிக்கை வாசிப்பினைத் தொடர்ந்து, விழாத் தலைவரான தி. தி. தே. மேலாண்மை மற்றும் பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் தன் தலைமை உரையில் அன்னமய்யா பாடல்களில் பொதிந்திருக்கும் நீதிக் கருத்துக்கள், பக்தி நுணுக்கங்களை எடுத்துக் காட்டுகளுடன் விளக்கிப் பேசினார். பின்னர் அமைச்சரவர்கள் இசை விழாவினைத் துவக்கி வைக்கும் வகையில் குத்துவிளக்கு ஏற்றினார். பிறகு, தி. தி. தே. வெளியிட்ட ஒலி நாடாக்களை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து, ஸ்ரீ அன்னமாசார்யா சந்ததியினர் இருவருக்கு தி. தி. தே. ஆதரவில் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். பின் தன் திறப்புரையில், அன்னமய்யா கீர்த்தனைகளின் மூலம் 15ம் நூற்றாண்டின் வாழ்க்கை மேம்பாட்டினைச்சுட்டிக்காட்டினார். தொடர்ந்து அன்னமய்யாவின் சமய வரலாற்றை விளக்கிப் பேசி, அவர்தம் பாடல்கள் இன்றைய பக்தி விழிப்புணர்ச்சிக்கு எவ்வகையில் துணை புரியும் என்பதையும் சில பாடல்கள் மூலம் விளக்கினார் பின்னர் தி. தி. தே. பாதுகாப்பு மற்றும் கண்காணிப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெயசந்திரா அவர்கள் நன்றி நவின்றார்.

ஏழு நாட்கள் நடைபெற்ற இவ் இசைவிழாவின்போது, காலையிலும் மாலையிலும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வருகை புரிந்த பல இசைக் கலைஞர்களின் கர்நாடக இசை, நாட்டியம், மற்றும் விளக்க உரைகள் ஆகியன நடைபெற்றன. இவ்விழாவில், திருமதி. பி. ராஜேஸ்வரி ஸ்ரீநிவாஸ் திரு. ஐ. பி. சீதாபதி ராவ், திரு. அன்னவரபு ராமசுவாமி, திரு. ஏ. வி. எஸ். கிருஷ்ணராவ், திரு. குன்னக்குடி ஆர். வைத்யநாதன், திரு. அர்ர கிருஷ்ணமூர்த்தி குமாரி. ஸ்ரீவாணி, திரு. பஸவ ராஜு சகோதரர்கள், திரு. மகாராஜபுரம் சந்தானம், திருமதி. சாருமதி ராமச்சந்திரன், திரு. சி. சிட்டிபாபு, டாக்டர். என். ரமணி, திரு. நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன், திருமதி. ஆர். சாயாதேவி, திருமதி. சோபா ராஜு மற்றும் பல கலைஞர்கள் பங்கேற்று திருப்பதி நகரத்தை இசை வெள்ளத்தில் அமிழ்த்தினர். இவ்விழா நாட்களின்போது, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள் திருவாளர்கள், டாக்டர். என். தேவநாதன், சி. ஆனந்தராவ், சி. சத்ய நாராயண ராவ், ஐ. எல். என். சாஸ்திரி, பி. ராமசந்திர ராஜு, எல். வி. ராமய்யா, திருமதி. ராஜலட்சுமி மற்றும் பலர் சிறப்பு விருந்தினர்களாக பங்கேற்று சிறப்பித்தினர்.

19-5-87 அன்று நடைபெற்ற விழாவின் 'பிரிவு வாழ்த்துரை' நிகழ்ச்சி நடைபெற்றது. இவ்விழாவிற்கு சித்தூர் மாவட்ட முதல்வர். திரு. பி. ஆர். கே. பரமஹம்ஸா அவர்கள் தலைமை வகித்தார். திருப்பதியில் உள்ள மகளிர்ப்பல்கலைக்கழகத் துணை வேந்தர் திருமதி. கோலா. ராஜ்ய லக்ஷ்மி அவர்கள் சிறப்பு விருந்தினராக இவ்விழாவில் பங்கேற்றார்.

**உண்டியில் :**

திருமலைக் கோயில் உண்டியலில் இம்மாதம் 8 மற்றும் 9 தேதிகளில் பக்தர்கள் இருவர் தனித்தனியாக ரூ. 2.5 இலட்சரூபாய் கட்டுக்களை ஒரு பிளாஸ்டிக் உறையில் வைத்து காணிக்கையாகச் செலுத்தியிருந்தனர்.

(18-ம் பக்கம் பார்க்க)



நிலேயத்திலிருந்து வடக்காக நடந்தால் நாலேந்து நிமிடங்களிலேயே சந்நிதித் தெருவிற்கு வந்து விடலாம். ஏழு அடுக்குகளுடன், எழில் வடிவச் சுதைச் சிற்பங்களுடன் கூடிய, தரை மட்டத்திலிருந்து 138 அடி உயரமான ராஜகோபுரம் கோயிலுக்கு மட்டுமே அல்லாது, திருப்பதி நகரத்திற்கே அழகு தருவதாய் விளங்குகின்றது. அதன் உச்சியில் பதினேரு பொன் முலாமிட்ட கலசங்கள் கதிரவனெளியில் மிளிரும். கோயிலின் முகப்பிலிலே அமைந்திருந்தாலும், இக்கோபுரம் என்னவோ கி. பி. 1628 ஆண்டுவாக்கில்தான் தேவசோட குடும்பத்தைச் சேர்ந்த மட்லி குமார அனந்தராஜன் என்னும் சிற்றரசனுல் கட்டப்பட்டதாகும். கல்லினுலான அடித்தளக் கட்டிடத்தில் புராணக் கதைக் காட்சிகளின் படைப்புச் சிற்பங்கள் நம் கண்களே விட்டு அகலா.

# திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜர்

''குறைவொன்றுமில்லாத
கோவிந்தா!''
'கூடாரை வெல்லும் சீர்க்
கோவிந்தா!'
'கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்,
கோவிந்தா! கோவிந்தா!'

பசுக்களாகிய மாந்தர் அனேவரையும் பரிவுடன் பாதுகாப்பவன் என்னும் கருத்தில் பக்தர்களினுல் பரவசத்துடன் கொண்டாடப் பெற்று வரும் விஷ்ணு மூர்த்தம் 'கோவிந்தன்!'. எனவே, எப்போதும்

'கோவிந்தேதி ஸதா ஸ்நாநம்
கோவிந்தேதி ஸதா ஜபம்
கோவிந்தேதி ஸதா த்யானம்
ஸதா கோவிந்தேதி கீர்த்தனம்!'

என்றவாறுக, அவன் நாமத்தைப் பண்டிதரும் பாமரரும் உரத்தக் குரலில் விளித்தழைத்துப் பாதுகாப்புணர்ச்சியைப் பெறுவதில் வியப்பு ஏதுமில்லே!

அத்தகையதோர் அரிய பெயர்ப் பெருமையினேயுடையவர் 'அரவணேயிற் பள்ளி கொள்ளும் கோ' ஆகிய தில்லேக் கோவிந்தராஜப்பெருமாள். தில்லேச் சித்திரக்கூடத்திலிருந்து அலேகடலில் எடுத்தெறியப்பட்டதாகச் சொல்லப்படும் அப்பெருமாள் ஏழுமலேயின் அடிவாரத்தில் அமைந்திருந்த யாதவப் பெருமாளின் ஆலய வளாகத்தில் குடியேற்றப்பட்டார்! இதில் மேலும் வியப்பு என்னவெனில், அவ்வாலயத்தின் பெயரே 'கோவிந்தராஜர் கோவில்' என மாற்றம் பெற்றதாகும்!

ஊருக்குக் கிழக்குப் பகுதியிலிருந்து தொலேவில் வரும்போதே நம்மைக் கவருவது மாபெரும் ராஜகோபுரம். திருப்பதி கிழக்கு இரயில்

இங்கேயே நின்று விடாமல், இரண்டு இடைநிலேக் கோபுரங்களேத் தாண்டி, நேராக முதலில் கோவிந்தராஜர் சந்நிதிக்குச் சென்று முதலில் சேவித்து விடுவோம். போகும் போது சில விவரங்களேத் தெரிந்து கொள்ளலாம்.

---

திரு. அ. நடராஜன் — திருப்பதி.

---

கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் சோழ நாட்டை ஆண்டு வந்த குலோத்துங்கன் சைவப்பற்று மிக்கவனுக விளங்கினுன். தில்லேயிலுள்ள நடராஜர் கோவிலில் சித்திரக்கூடத்தில் இருந்த கோவிந்தராஜரின் விக்கிரகத்தைக் கடலில் எறிந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. இதைக் கேட்டு வருந்திய இராமானுஜர் அவ்



உட்கோயிலின் பிற்பகுதி தோற்றம்

விக்கிரகத்தைக் கடலிலிருந்து மீட்டு, வைணவத்திற்குப் பாதுகாப்பான இடமாக விளங்கிய திருப்பதியிலுள்ள பார்த்தசாரதிப் பெருமாளின் கோவில் வளாகத்தில், அப்பெருமாளின் கோவிலுக்குச் சற்று வடபுறமாக கி. பி. 1130இல் பிரதிஷ்டை செய்ததாக வரலாறு. இக்கோவிந்தராஜர் கோவிலை, இராமானுஜர் ஒரு யாதவராய (கெட்டி யாதவ நாராயண)அரசனைக் கொண்டு கட்டுவித்ததாக வரலாறு. இதை மெய்ப்பிக்கும்வண்ணம், கோவிந்தராஜர் கோவிலின் கோபுரங்களுக்கு நேர் எதிராக அமைந்திருப்பது இப்பார்த்தசாரதியின் சந்நிதியே.

கோவிந்தராஜர் கோயிலை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்: கோவிந்தராஜர், பார்த்தசாரதி, ஆண்டாள் சந்நிதிகள் அமைந்த உட்பகுதி; திருமலைநம்பி, இராமானுஜர், சாலைநாச்சியார் சந்நிதிகள் அமைந்த இடைப்பகுதி; முதலாழ்வார்கள், மணவாள மாமுனி, வேதாந்ததேசிகர் கோவில்கள் அமைந்த வெளிப்பகுதி.

உட்பகுதியான முதல் பிராகாரத்தின் சுற்றுச் சுவரின் கிழக்குப் பகுதியில் உள்ள கோபுரம் மூன்று அடுக்குகளும் ஒரு கலசமும் கொண்டு அமைந்துள்ளது. கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப் பெற்றது. அதன் வழியே உள்ளே நுழைந்து, நேரே சென்று, படியேறி வடக்கே சென்றால் கோவிந்தராஜர் சந்நிதிக்குச் செல்லும் நடைக்கு வருவோம். படிதாண்டிச் சென்றால் அர்த்தமண்டபத்திற்கு வந்து திருச்சந்நிதிக்கு இப்புறம் நிற்போம். ஏழுதலைப்பாம்பணை மீது பள்ளி கொண்ட திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுகம். தலையின் கீழ் முகத்தலளவை மரக்கால். திருமலை சீனிவாஸன் தனது திருக்கல்யாணத்திற்குக் குபேரனிடமிருந்து வாங்கிய கடனை அடைக்கும்பொருட்டுச் சம்பாதிக்கும் பணத்தை அளந்து அளந்து சோர்வுற்று, மரக்காலைத் தலையணையாகக்கொண்டு பெருமாள் ஓய்வு கொள்வதாக ஐதிகம் என்று அர்ச்சகர் சொல்வார். சுதை உருவம்; சித்திரக்கூடத்திலிருந்து கொண்டு வரப்பெற்ற கோவிந்தராஜரின் விக்கிரகம் மற்றும் 'சாளக்கிராமம்' ஒன்று உள்ளே கொண்டது. நாபியிலிருந்து உயரச் செல்லும் கமலத்தில் நான்முகன்; காலடிகளில் கிழக்கு நோக்கிய திருமகள் கற்சிலை; தெற்கு நோக்கிய புவிமகள் கற்சிலை; காலடிகளுக்கு வடகிழக்குக் கோடியில் மது, கைடபர் என்னும் இரு அரக்கர்கள் நின்ற நிலையில் உள்ளனர். பார்த்தசாரதிக் கோவிலுடைய உற்சவமூர்த்திகளே இன்றைய கோவிந்தன், ஸ்ரீதேவி, பூதேவி உற்சவமூர்த்திகள்; கபிலதீர்த்தம் சாலையிலுள்ள திருமங்கை ஆழ்வார் கோவிலிலிருந்து கொண்டு வரப்பெற்ற இராமர், இலட்சுமணர் செப்புச் சிலைகள், உற்சவ சுதர்சனர், அருகிலுள்ள அனுமார் கோவிலிலிருந்து கொண்டு வரப்பெற்ற அனுமன் உற்சவமூர்த்தி ஆகியனவும் உள்ளன. கண்ணைக் கவரும் அலங்காரம். நின்று சேவித்த பிறகு, வெளியே வந்து உட்புறச் சுற்றை வலமாக வரலாம். வடகிழக்கு மூலையில் சேனை முதலியார். இரு துவார பாலர்களும் கி. பி. 1549இல் நந்தியால நாரப்பராயன் என்பவரால் நிறுவப்பட்டன.

வெளியே வந்து தெற்குப்புறம் வந்தால், பார்த்தசாரதி என்னும் யாதவப் பெருமாள் கோவிலுக்கு வருகிறோம்.

இந்தக் கோவில் மிகச் சமீப காலம் வரை மூடப்பட்டிருந்தது. கோபுரத்திற்கு நேர் எதிராக இது அமைந்திருப்பதே, இதுவே பழமையானது என்பதற்குச் சான்றாகும். கோவிந்தராஜர் விக்கிரகமும் சந்நிதியும் நிறுவப்படுவதற்கு முன்னதாகவே எந்தக் காரணத்தாலோ இங்கு வழிபாடு நின்று போயிற்று எனத் தோன்றுகிறது; ஏன் எனில், கோயில் முழுவதிலும் காணப்படும் பல கல்வெட்டுக்களில் ஒன்றிலாவது இம்மூர்த்தியின் வழிபாடு பற்றிய குறிப்பு எதுவும் கிடைக்கவில்லை. கருவறையின் வெளிப்புறச் சுவரிலுள்ள மாடங்களின் மேலுள்ள மகர தோரணங்களின் அமைப்பு, இது பிற்காலத்திய பல்லவர்களின் காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப் பெறுவ

தற்கு இடம் தருகிறது. ஆயினும், கருவறையின் வெளிப்பகுதிகளின் தூண்களின் மேற்பகுதிகள் சோழர் பாணியில் அமைந்திருக்கின்றன; ஒரு கால் தொடக்க காலச் சோழர்களி ஞல் நிருமிக்கப்பட்டிருக்கலாம்.

இன்று பார்த்தசாரதியின் கரு வறையில் இருப்பவர்கள் பார்த்த சாரதி என்னும் கிருஷ்ணனும் அவன் தேவியரான ருக்மிணியும் சத்தியபாமையும் ஆவர். நல்ல எழில் மிக்க வடிவங்கள். கிருஷ்ணனின் இடது கை சத்தியபாமையின் மருங்கை அணைத்தாற்போல் காணப் படுவது கவனிக்கத்தக்கது.

இங்கிருந்து வெளிவந்து இரண்டு, மூன்று படிகள் இறங்கி வலது புறம் சென்ருல் 'திருப்பாவை பாடிய செல்வி'யாம் ஆண்டாள் சந்நிதி. ஆண்டாள் கோயில், பார்த்தசாரதி கோவில், கோவிந்தராஜர் கோவில் மூன்றும் சற்று உயர்ந்த தளத்தில் அமைந்துள்ளன. ஆண்டாள் கோவில், பின்னிரு கோவில்களின் முன் மண்டபத்தின் ஒரு பகுதியே யாகும். அதன் வடபுறச் சுவரின் உட்பகுதியில் காணப்படும் கல் வெட்டு ஒன்றிலிருந்து, அது கி. பி. 1308க்கு முன்னதாகக் கட்டப்பட்டி ருக்க வேண்டும் என்று தெரிகிறது. எனினும், கி. பி. 1495இலிருந்தே அது முழுப் பிராபல்யம் அடைந் தது.

மூல விக்கிரகமும் உற்சவமூர்த்தியும் அழகுப் பொக்கிஷங்கள். தலையில் கொண்டையும் ஜடையில் தசாவதாரங்களைக் காண்பிக்கும் பொன்வில்லைகளாலான நகையும் 'சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே, பாடகமே யென்றனைய பல்கலனும்' காணக் காணத் திகட் டாதவை. மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து கைத்தலம் பற்றிய கணுக் கண்ட மகிழ்ச்சி பொங்கும் திருவதனம். சந்தானகோபாலகிருஷ் ணன் விக்கிரகம் ஒன்றும் உள்ளது.

கோவிந்தராஜரின் சந்நிதிக்கு எதி ரில், சற்றுக் கீழான தளத்தில் முக மண்டபத்தில் கருடாழ்வாரின் கோவில். இதற்கு எதிர்த்தாற் போல் பலிபீடமும் துவஜஸ்தம்ப மும் அமைக்கப்பெற்றுள்ளன. (பார்த்தஸாரதிக் கோவிலுக்கெதிரில் இருந்த துவஜஸ்தம்பமும் பலிபீட மும் அகற்றப்பட்டதாகத் தெரி கிறது).

ஆண்டாளின் கோவிலிலிருந்து இறங்கி வெளிப்பிராகாரத்தில் வலது புறம் திரும்பினுல், விமானத்துடன் கூடிய ஒரு நான்கு கால் மண்டபம் உள்ளது. இது கிருஷ்ணதேவராய ரின் சேனைத் தலைவர்களுள் ஒருவ ரான கரவெட்டிப் புலியாழ்வார் என்பவரின் மகனுன அப்பாப்பிள்ளை கட்டியதாகும். இன்றுள்ள கோவிந்தராஜ புஷ்கரணி கட்டப்படு வதற்கு முன், இந்த மண்டபமே நீராழி மண்டபமாகப் பயன்பட்டு வந்ததாகத் தெரிகிறது. அதைச் சுற்றிலும் நீரை நிரப்பி, வைகாசி, ஆனி உற்சவங்களின்போது உற் சவரை அதில் எழுந்தருளப் பண்ணு வது வழக்கமாயிருந்தது.

அதற்கு அருகில் இருப்பது, பிர ஸாதங்கள் தயாரிக்கப்படும் தளிகை யறை. அடுத்துள்ள கல்யாண மண் டபம் திருமலைக் கோவிலிலுள்ளதை நினைவுபடுத்துவது; சிற்ப வேலை எழில் நிறைந்து விளங்குவது; உள்ளே, வேங்கடேசுவரர் ஸ்ரீதேவி, பூதேவி சமேதராகக் காட்சி அளிக்கி ருர். இம்மண்டபத்தில் தென்படும் கோலாட்ட நாட்டியக் காட்சி உள் ளத்தைக் கொள்ளை கொள்ளுவ தாகும்; இதில் வர்ணச் சித்திரங்கள் சிலவும் காணப்படுகின்றன. அதற் குப் பின்னுல், யாக சாலை. மேற் குப் பகுதியில் இருபுறமும் திறந் துள்ள பிராகார மண்டபம். வடது புறத்திலிருக்கும் இத்தகைய மண்ட பம் அறைகளாகத் தடுக்கப்பட்டுள் ளது. பிராகாரமண்டபத்தின் வட மேற்கு மூலையில் கூப்பிய கரங்களு டன் பூணூல் மற்றும் மணிகள் அணிந்து ஒரு சிலை காணப்படுகின் றது. கிழக்கில் பலிபீடத்திற்கு எதிரே ஆஞ்சநேயர் சந்நிதி ஒன்று உள்ளது. அதற்கு மேலாக ஒரு மண்டபத்தில் அக்கண்ணு (கோல் கொண்டா சுல்தானிடம் அமைச்ச ராக இருந்தவர்) சுதைச் சிற்பம் இருந்ததாகவும் அதை அகற்றி வட மேற்கு மூலையில் வைக்கப்பட்டி ருக்கிறது என்று சொல்லப்படுகிறது. பார்த்தசாரதி கோவில் மீண்டும் கி.பி.1977-இல் திறக்கப்பட்டபோது, அங்கிருந்து எடுக்கப் பெற்ற ஆழ் வார் சிலை ஒன்றும் அங்கு இருந்த தாகவும் அது இப்போது காணப்பட வில்லை என்றும் சொல்லப்படுகிறது. தெற்குப்பக்கத்தில் அமைந்துள்ள நீராழி மண்டபத்தைப் போன்றே வடக்குப் பக்கத்திலும் ஒன்று உள் ளது. துவஜாரோகண மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. கொடி யேற்றத்தின்போது பெருமாள் தேவி யருடன் அதில் எழுந்தருளுகிருர்.

முதல் பிராகாரமான உட்பகுதி யிலிருந்து வெளியே வந்தவுடன், கோவில் வளாகத்தின் இடைப்பகுதி யில் தென்புறத்தில் முதலில் இருப் பது திருமலைநம்பி சந்நிதி. இராமா னுஜரின் தாய்மாமன் திருமலைநம்பி. திருவேங்கடமுடையான் கோவிலில் மணவாளப்பெருமாளின் திருமஞ்ச னத்திற்கும் திருவேங்கடமுடையா னின் பூஜைக்கும் தினந்தோறும் ஆகாச கங்கையிலிருந்து தீர்த்தம் கொண்டு வரும் சேவையை ஆயுள் முழுவதும் செய்தவர். மூலவர், உற்சவர் தவிர ருக்மிணி, சத்திய பாமையுடன் கூடிய வேணு கோபாலன் செப்புப் படிமங்களும் உள்ளன.

அதை ஒட்டினுற்போல் கிழக்கே இருப்பது வைணவ உலகம் கொண் டாடும் இராமானுஜரின் கோவில். கோவிலின் முகப்பை அழகு செய்யும் கோபுரம் கி. பி. 1220க்குப் பிறகு கட்டப்பட்டிருக்க வேண்டும் எனத்

தெரிகிறது. மூலவர், உற்சவர் இரண்டுமே நல்ல காத்திரமான வடிவங்கள். இவையன்றி இராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரின் அழகான செப்புப்படிமங்களும் உள்ளன; இவை இங்கு வைக்கப்பட்டதன் காரணமாகவே, திருப்பதி கோதண்டராமர் கோவிலிலுள்ள பெருமான் பெரிய இரகுநாதர் என்று அழைக்கப்பட்டார்.

அடுத்ததாக, தூண்களுடன் கூடிய மண்டபத்தின் ஒரு பகுதி கூரத்தாழ்வாரின் கோவிலாக அமைக்கப்பட்டது; கி.பி.1433க்கு முன்னதாகக் கட்டப்பட்டிருக்க வேண்டும். இதில் திருமழிசை ஆழ்வாரின் மூலவரும் அமைந்துள்ளார். கபிலதீர்த்தம் செல்லும் வழியிலுள்ள திருமங்கையாழ்வார் கோவில் சிதைவடைந்த பின்னர், அதிலிருந்த விக்கிரகமும் இங்கு கொணர்ந்து வைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இது மஹந்து தர்மாதாஸ் அவர்களால் புதிதாக அமைக்கப்பட்டு, பட்டரையும் அவர் அதில் பிரதிஷ்டை செய்தார்.

அதை அடுத்து இப்போது வாகன மண்டபம் அமைந்துள்ளது. அதை ஒட்டினாற்போல் கிழக்குப் பக்கத்தில் இருப்பது சாலை நாச்சியார் கோவில். முன்பு இது கோவிந்தராஜர் கோயிலின் பண்டக சாலை இருந்த இடத்திற்கு எதிராக அமைந்திருப்பதனால் இப்பெயர் ஏற்பட்டது போலும். உண்மையில் இத்தேவியின் பெயர் புண்டரீகவல்லித் தாயார். படிதாண்டாப் பத்தினி. நான்கு திருக்கரங்களுடன்கூடிய ஸ்ரீமகாலக்ஷ்மி, யாதவப் பெருமாள் (பார்த்தசாரதி) கோயிலுக்கு வடது புறம் தெற்கு நோக்கிய கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது என்றும், இராமானுஜர் கோவிந்தராஜரைப் பிரதிஷ்டை செய்த பிறகு, இத்தாயார் அவ்விடமிருந்து அகற்றப்பட்டு இரண்டாம் பிராகாரத்திலுள்ள முக மண்டபத்தில் மீண்டும் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்றும் தெரிய வருகிறது. எல்லா உற்சவங்களும் கோயிலுக்குள்ளேயே நடைபெறுகின்றன. மிகுந்த வரப்பிரஸாதி. தங்கள் கோரிக்கைகள் நிறைவேற இத்தேவியிடம் பக்தர்கள் பிரார்த்தனை செய்து கொள்வது உண்டு. மூலமூர்த்தி, உற்சவத் திருவுரு இரண்டுமே அழகும் அமைதியும் மேவிட்ட வடிவங்கள். இது கி.பி. 1457க்குச் சிறிது காலம் முன்னதாகக் கட்டப்பட்டிருக்க வேண்டும். முகப்பிலுள்ள அஷ்டலக்ஷ்மி சுதைச் சிற்பங்கள் அழகுடனும் அருளுடனும் விளங்குபவை.

இடைப் பகுதியின் வட புறத்தில் மேற்கிலிருந்து வரிசையாக, பணியாளர்களின் அறை; பிரஸாதங்கள் விற்கப்படும் அறைகள் உள்ளன. அதை அடுத்து மதுரகவி ஆழ்வாரின் கோவில்; இதில் அனந்தாழ்வாரும் எழுந்தருளியிருக்கிறார். இதற்கு எதிரில் இருக்கும் கிணறு கோயிலுக்கு வேண்டிய நீரை வழங்குகிறது. அதை அடுத்து, நடுவில் திறந்த வெளியும் மூன்று புறம் மண்டபமும் உள்ள கட்டிடம். கோயில் பண்டகசாலையாக இருந்த இது தற்போது விக்கிரகங்கள், நகைகள் தயாரிக்கப்படும் இடமாக இருந்து வருகிறது. இதன் நுழை வாயிலுக்கு மேலாகவுள்ள முகப்பில் தசாவதாரமூர்த்திகள் சுதை வடிவில் அமைந்த அருமையான சிற்பங்கள்.

இங்கிருந்து கிழக்காக வந்தால், இரண்டாவது பிராகாரச் சுவரின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள கோபுரத்தை ஒட்டி, கீழே ஒரு மண்டபமும் மேலே ஒரு மண்டபமும் மேற்கு நோக்கி அமைந்துள்ளன. படிகளின் வழியாக மேலே ஏறிச் சென்றால், கோபுரத்தை ஒட்டிய கல்லின் மீது சக்கரத்தாழ்வாரின் வடிவம் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். கோபுரம் மூன்று அடுக்குகளுடனும் ஏழு கலசங்களுடனும் நல்ல சிற்பங்களைக் கொண்டதாய் விளங்குகிறது. கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது.

கோவிந்தராஜர் கோயில் வளாகத்தின் வெளிப்பகுதிக்கு வருகிறோம். கோபுரத்தின் இரு புறத்திலும் காவல் மண்டபங்கள். இரண்டாம் பிராகாரச் சுவரை ஒட்டினாற்போல் கிழக்கு நோக்கிக் காணப்படுவது முதலாழ்வார்கள் கோவில். முதலாழ்வார்கள் மூவருக்கும் மூல, உற்சவத் திருவுருக்கள் உள்ளன. எல்லாமே நல்ல திண்மையானவையாய்த் திகழ்பவை. முதலியாண்டானுக்கு மட்டும் சிறிய அளவில்தான் உற்சவமூர்த்தியே இருக்கின்றது. அதை ஒட்டியிருக்கும் அறைகளைத் தாண்டினால், முன்பு 'நௌபத்கானா' என்றழைக்கப் பெற்ற 'வாத்திய இசை' நிகழ்த்தப் பெற்று வந்த கட்டிடம்.

தென்புறத்தில் கிழக்குப் பிராகாரச் சுவருக்கருகில் அமைந்திருப்பது இலக்ஷ்மி தேவி மண்டபம். கி. பி. 1537 இல் நாமிசெட்டி என்பவரால் கோவிந்தராஜப் பெருமாளுக்கு ஓர் இலக்ஷ்மிதேவி திருவிழா ஏற்படுத்தப் பட்டது. கோபுரத்திற்கு வெளிப் புறத்தில் அமைந்துள்ள ஒரு மண்டபத்திலும், கோவிலிலும் பிரஸாதங்கள் பெருமாளுக்குப் படைக்கப் பட்டது என்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது. எனவே, கி. பி. 1537க்குப் பிற்பட்டே இம்மண்டபம் நிறுவப்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். கி. பி. 1494க்கு முன் அகோபிலமடத்தைச் சேர்ந்த வண் சடகோப ஜீயரால் வசந்த மண்டபம் ஒன்று வெளிக் கோபுரத்திற்கு வெளியே கட்டப்படத் தொடங்கப் பெற்றது என்றும், முடிவடையாத அதை நல்லார் அங்காண்டை என்பவர் அதைக் கட்டி முடித்ததாகவும் ஒரு வரலாறு உள்ளது. ஒரு கால் இந்த வசந்த மண்டபத்தின் விரிவாக்கமே இந்த இலக்ஷ்மிதேவி மண்டபம் எனக் கருதலாம்.

(44-ம் பக்கம் பார்க்க)

## சிறுவர் பகுதி

உலகம் அமைதியாகவும் ஆனந்த மாகவும் வாழ வேண்டுமானுல், மக்களுக்குத் தெளிந்த அறிவு இருத்தல் வேண்டும், தெளிந்த அறிவும், நிறைந்த வலிவும், சிறந்த பொலிவும், செறிந்த துணிவும் உடையவர்களே நமக்கு வழிகாட்டிகளாக அமைதல் கூடும்.

இத்தகைய சிறந்த நற்குணங்கள் அமையப் பெற்ற சான்ருேராக அனுமர் விளங்கினுர். எனவேதான் இராம பிரான் அனுமரின் துணையை இறுதி வரை நம்பி நாடி வந்தார். பாண்டவர்களும் தங்கள் வெற்றிக்குத் துணையாக அனுமரையே தங்கள் கொடியில் அமர்ந்து காக்குமாறு வேண்டிக் கொண்டனர்.

# அனுமக்கொடி

வாழ்வில் வெற்றி பெற விரும்புவோர் அனுமரையே வழிபட்டு வாழ்வும் வளமும் பெற்றுச் சிறப்படைதலைக் காணலாம்.

வாயு பகவானின் திருக்குமாரனுக அனுமர் அவதாரம் செய்தார். பாண்டவர்களுள் ஒருவனுன வீமனும் வாயு பகவானின் மைந்தனே! எனவே, அனுமரும் வீமனும் அண்ணன் தம்பியராகவே கருதப்படுகின்றனர். ஆனுல், துவைத மதமோ அனுமரே வீமனுகப் பிறந்தார் என்று கூறுகிறது.

அனுமரும் வீமனும் சந்தித்து உரையாடும் சுவையான பகுதி பாரதத்தில் ஆரண்ய பருவத்தில் காணப்படுகிறது. இவ்வுரையாடல் கற்பார்க்குக் களிப்பினைத் தரவல்லது. அவ்வுரையாடலை இனிக் காண்போம்:

**வீமன் :**

(தனிமையில்) சுகந்த மலர் வேண்டுமென்று திரௌபதி கேட்டுவிட்டாள். அம்மலரோ இந்திரன் வாழும் அமராவதி நகரிலும் குபேரன் வாழும் அளகாபுரியிலும் மட்டுமே கிடைக்கும் என்று உரோமசன்ம முனிவர் கூறுகிருர். எனவே நான் அளகாபுரி நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன். வழியில்தான் எத்தனை இன்னல்கள்! எனை எதிர்த்த அரக்கர்களை யெல்லாம் தோல்வியுறச் செய்தேன்! காடு மலைகளை யெல்லாம் நடந்து வந்து இங்கே நிற்கிறேன். இந்த வழியை அடைத்துக் கொண்டு மலைபோல் இங்கே ஒருவர் காட்சியளிக்கிருரே! இவர் யாராக இருக்கக் கூடும். சற்று நிதானித்துப் பார்ப்போம்.

**அனுமர் :**

(தனிமையில்) இதோ கதாயுதத்தைத் தோள்மேல் தாங்கி வீமன் வருகிருன். மனித நடமாட்டமே இல்லாத மலை இது! தனிமையில் இருந்து தவம் செய்யவே நான் இவ்விடத்தைத் தேர்ந்தெடுத்தேன். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியை மீண்டும் எப்போது காண்போம் என்னும் ஏக்கம் என் உள்ளத்தை வாட்டி வதைக்கிறது! என் எண்ணம், என் வாழ்வு, என் மூச்சு, என் உயிர் அனைத்தும் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியே! இராம நாமத்தையே சதா உச்சரித்துக் கொண்டிருக்கும் என்னை நாடித்தான் வீமன் வருகின்ருனே? பொறுத்துப் பார்ப்போம். ராம்! ராம்! ராம்!

**வீமன் :**

(அனுமரை நெருங்கி) ஓ! வானரரே! வழியை அடைத்துக் கொண்டு இங்கே ஏன் படுத்துக் கொண்டிருக்கிறீர்! நான் அளகாபுரி சென்று கொண்டிருக்கிறேன். தடை செய்யாது வழி விடும்!

**அனுமர் :**

அடே சிறுவா! அமரரும் என்னைக் கண்டு அஞ்சுவர். ஆனுல் நீயோ என் எதிரே வந்து துணிவுடன் நிற்பது மன்றி வானரமே என்று ஏளனமாகவும் அழைக்கிருய்! தோள்மேல் கதாயுதத்தை வைத்துக் கொண்டிருப்பதாலேயே பெரிய வீரன் என்னும் நினைப்போ?

**வீமன் :**

ஐயா! உம் கழுத்திலோ துளசி மணி மாலை! தோற்றமோ முதிர்ந்து காணப்படுகிறது! நாவோ இராம நாமத்தை உச்சரித்துக் கொண்டிருக்கிறது! ஆனுல் உமக்கு மரியாதை என்பது சிறிதும் தெரியவில்லையே!

**அனுமர் :**

அடே மடையா! மரியாதையைப் பற்றி நீயா எனக்குச் சொல்லிக் கொடுக்கிருய்! என்னை எதிர்த்துப் பேசும் அளவுக்கு உனக்கு வீரம் எங்கேயிருந்து வந்தது?

---

*மாருதிதாசன்–காஞ்சிபுரம்.*

---

**வீமன் :**

ஐயா! நீர் மூத்தவராயிற்றே என்று பார்க்கிறேன். மேலும் வானர குலத்தைச் சேர்ந்தவராகவும் இருக்கிறீர்! எனவே தான் பொறுத்துக் கொண்டிருக்கிறேன். வேறு யாரேனும் இவ்விதம் பேசியிருந்தால் நடப்பதே வேறு விதமாக இருக்கும்!

**அனுமர் :**

வானர குலத்தைச் சேர்ந்தவனுக இருப்பதால் பொறுமை காட்டுவதாகச் சொல்கிருயே! உனக்கும் வானரங்களுக்கும் உறவு ஏதேனும் உளதோ?

**வீமன் :**

ஆமாம்! எனக்கும் வானர குலத்துக்கும் உறவு உண்டு என்பது உண்மையே! எனவேதான், வானர குலத்தவர் அனைவருக்குமே நான் மரியாதை கொடுத்து வருகிறேன்!

**அனுமர் :**

அடே சிறுவா! உன் பேச்சைக் கேட்டால் எனக்குச் சிரிப்புத்தான்

## சமூகத்தில் ஏழு பாபங்கள்

கொள்கையில்லாத அரசியல், உழைப்பில்லாத ஊதியம், நாணயமில்லாத வியாபாரம், ஒழுக்கமில்லாத கல்வி, மனச்சாட்சியில்லாத இன்பம், மனிதாபிமானம் இல்லாத விஞ்ஞானம், தியாகமில்லாத பிரார்த்தனை—இவை ஏழும் பாபங்கள்.

சொத்தும், அதிகாரமும், அந்தஸ்தும் சேர்ந்து மனிதனை வெகு தூரம் பாப காரியங்களுக்கும் தவறுகளுக்கும் ஆளாக்கி அலைக்கழித்திருக்கின்றன.

பாவங்களெல்லாம் ரகசியமாகச் செய்யப் பெறுகின்றன. நம்முடைய எண்ணங்களையும்கூடக் கடவுள் அறிவார் என்பதை நாம் உணர்ந்து விட்டால், அந்த விநாடி முதல் நமக்கு விடுதலைதான்.

— காந்தியடிகள்.

தொகுப்பு : தேனி எம். சுப்பிரமணி.

வருகிறது. சந்தர்ப்பத்துக் கேற்றவாறு பேசுவதற்கு நீ எங்கே கற்றுக் கொண்டாய்?

**வீமன் :**

ஏ கிழக் குரங்கே! என்னைப் பார்த்துக் கிண்டலா செய்கிறாய்? என் வலிமையை நீ அறியமாட்டாய்! இதோ என் கை வன்மையைக் காட்டுகிறேன் பார்! (கதையை ஓங்குகிறான்.)

**அனுமார் :**

அவசரப்படுகிறாயே தம்பி! 'இளங்கன்று பயமறியாது!' என்பார்கள். கொஞ்சம் பொறு! வானரர் ஒருவர் உனக்கு உறவென்று கூறினாயே! அவர் பெயரை நான் அறிந்து கொள்ளலாமா? அவரைப் பற்றிக் கூறிய பிறகு இந்தக் கதாயுதத்தால் என்ன செய்ய எண்ணுகிறாயோ செய்!

**வீமன் :**

அவர் யார் என்பதைக் கூறுகிறேன், கேள். அவர் பெயரைக் கேட்டால் உன் கொட்டம் தானே அடங்கிவிடும். அவர் புகழைக் கூற என்னால் இயலாது. என்றாலும், சுருக்கமாகக் கூறுகிறேன், கேள்.

வானரத் திலகமாகிய அவரை நான் மனமார வழிபட்டு வருகிறேன். நான் மட்டுமா வழிபடுகிறேன்? இந்த உலகமே அவரை வழிபட்டு வருகிறது. அவரை வழிபடுவதால் உண்டாகும் பயனைக் கூறுகிறேன், கேள்.

நல்ல அறிவு, உடல் வன்மை, புகழ் தைரியம், பயமின்மை, நோயின்மை, மனத்தெளிவு, சொல்லாற்றல் ஆகிய எண் வகைப் பேறுகளும் கிடைக்கும்.

அவர் நிகரற்ற வலிமை படைத்தவர்; கூரிய மதி நுட்பம் வாய்ந்தவர்; ஒளிமிக்க கண்களைப் பெற்றவர்; சொல்லாற்றல் மிக்கவர்; இராம லக்குவரைத் தோள்மீது சுமக்கப் பெற்ற பேராண்மைக்குரியவர்; கடலைத் தாவியவர்; தீயினால் இலங்கையைச் சுட்டவர்; பிராட்டிக்கு உயிரைத் தந்தவர்; பெருமாளுக்கு அருளமுதம் தந்தவர்; ஆடவர் திலகர்; ஐம்பொறிகளை அடக்கி யாண்டவர்; சிரஞ்சீவி பட்டம் பெற்றவர்; அஞ்சனாதேவியின் மைந்தர்; வாயு புத்திரர்; என் தமையர்; அவரே நான் வணங்கும் தெய்வம்!

**அனுமார் :**

(ஏளனமாகச் சிரித்து) அந்த அனுமனையா இவ்வளவு புகழ்கிறாய்! அவனா உன் அண்ணன்! போதும் போதும் உன் புகழ் மொழிகள்! அனுமனா!... அடே! அந்த அனுமனைப் பற்றியா இவ்வளவு நேரம் புகழ்ந்து கூறினாய்! (வாய்விட்டுச் சிரிக்கிறார்)

**வீமன் :**

ஐயா! ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்? இராமதூதராகிய அவரை நினைத்தாலே போதுமே! அவர் புகழைக் கேட்கப் புண்ணியமல்லவா செய்திருக்க வேண்டும்! அப்படியிருக்க நீர் ஏளனமாகச் சிரிப்பதேன்?

**அனுமார் :**

உன்னைப் பற்றி ஏதோ பெரிதாக நினைத்தேன். கேவலம் ஒரு குரங்கைப் புகழ்ந்து பேசிய போதே உன் வீரத்தை அறிந்து கொண்டேன். அந்த அற்பக் குரங்கின் புத்திதான் உனக்கும் இருக்கும் என்று எண்ணியே சிரித்தேன்!

**வீமன் :**

என் அண்ணனையா அற்பன் என்று கூறுகிறாய்! என்னைப்பற்றி எவ்வளவு இகழ்ந்து கூறினாலும் பொறுத்துக் கொள்வேன்! என் அண்ணலாகிய ஆஞ்சநேயரைக் குறித்து இகழ்ந்து பேசுபவர் யாவராயினும் அவர் நாவை அறுத்தெறிவேன்! ஏதோ வயதில் மூத்தவராயிற்றே என்று பார்க்கிறேன்!

**அனுமார் :**

அடே! மானிடனே! வயதில் நான் மூத்தவன் என்பதால், என்னால் ஒன்றும் செய்ய இயலாது என்று எண்ணுகிறாயா? என்னை உன்னாலும் ஒன்றும் செய்ய இயலாது! அந்த அனுமனாலும் ஒன்றும் செய்ய இயலாது! இராம தூதன் என்பதாலேயே அந்த அனுமன் உயர்ந்த வீரனாகி விடுவானா? அந்த அனுமனால் என் வாலைக்கூட அசைக்க முடியாது. தெரிந்து கொள்.

**வீமன் :**

ஏ கிழக்குரங்கே! என்ன கூறினாய்? என் அண்ணனின் வீரத்தையா இகழ்ந்தனை! இப்பொழுதே உன்னை

என்ன செய்கிறேன். பார்! (கதாயுதத்தை ஓங்குகிறுன்.)

**அனுமர் :**

அப்பா! ஆத்திரப்படாதே! கதாயுதத்தைக் கீழே வை. நீ யார்? உன் பேரென்ன? என்பதைக் கூறிவிட்டுப் பின்னர் என்னை உன் கதாயுதத்தால் என்ன செய்ய நினைக்கிருயோ அவ்வாறு செய்! யாரால் நான் சாகப் போகிறேன் என்பதை அறிந்து உயிர் விட்டால் எனக்குக் கொஞ்சம் நிம்மதி! எனவே, உன்னைப் பற்றிய விபரத்தைக் கூறப்பா!

**வீமன் :**

நான் யாராய் இருந்தால் உனக்கென்ன? இருந்தாலும் என்னைப் பற்றிக் கூறுகிறேன் கேள். அத்திஞபுரியைப் பாண்டு என்பவர் ஆண்டு வந்தார். அவருக்கு மக்கள் ஐவர். அந்த ஐவரில் மூத்தவர் தருமமே வடிவான தரும புத்திரர். அவருக்கு அடுத்த தம்பி நான். என் பெயர் வீமன்!

**அனுமர் :**

ஓகோ! நீ தான் அந்தப் பீமனு? நீங்கள் தானே துரியோதனுதியர்க்குப் பயந்து கொண்டு காட்டில் வாழ்ந்து வருபவர்கள்! அரச குலத்தில் பிறந்த நீங்கள் வீரத்தைக் காட்டி வெற்றி பெற வேண்டாமா? உங்கள் வீரம் மிகவும் நன்ருகவே இருக்கிறது!

**வீமன் :**

வீரத்தைப் பற்றி நீயா கூறுகிருய்! எங்கள் அண்ணன் தருமர். அவரின் நெறி தரும நெறி. அவரின் ஆணைக்குக் கட்டுப்பட்டு அடங்கிக் கிடக்கும் எங்களைக் கோழைகள் என்று எண்ணி விடாதே! எங்கள் உடலில் வலிமை இருக்கிறது! உள்ளத்தில் தர்மம் இருக்கிறது! துணைக்குக் கண்ணன் இருக்கிருர்! காலம் வரும்! அப்போது வெற்றி பெறுவோம்! அதுபற்றி உனக்கென்ன? என் அண்ணலாகிய ஆஞ்சநேயரைப் பற்றி நீ இதுவரை கூறியதற்காக மன்னிப்புக் கேள். இல்லையேல் எமனுலகு செல்லச் சித்தமாக இரு. என்ன சொல்கிருய்?

**அனுமர் :**

அடே மடையா! என்னையா மன்னிப்புக் கேட்கச் சொல்கிருய்! பெரிய வீரன் போல் பேசுகிருயே! இதோ தரையில் நெளிந்து கிடக்கும் என் வாலை மட்டும் அசைத்துவிடு. உன்னை வீரன் என்று ஒப்புக் கொள்கிறேன். அப்படி அசைக்காமல் போனுல் உன்னை வீமன் என்று நம்ப மாட்டேன். நீ இது வரை கூறியவை அனைத்தும் பொய்யென்றே கருதுவேன்! என்ன சொல்கிருய்?

**வீமன் :**

ஏ குரங்கே! என் வீரத்தையா சோதிக்கிருய்? இதோ பார்! உன் வாலைத் தூக்கி எறிகிறேன். (வாலைத் தொட்டுத் தூக்க முயல்கிருன்) என்ன? இந்த வால் இவ்வளவு கனமாக இருக்கிறதே! ஒரு கையால் முடியாதென்று இரண்டு கைகளாலும் தூக்கிப் பார்த்தேனே! முடியவில்லையே! இதென்ன விந்தை!

**அனுமர் :**

அப்பா! நீ வீமனுக இருந்தால் என்

## ஸ்ரீ வெங்கடேசனைப் பூஜித்த ஸ்ரீ வியாஸராஜர்

விஜயநகரப் பேரரசில் மன்னன் சாலுவநரஸிம்மன் ஆட்சிக் காலம் அது. ஒரு சமயம் திருப்பதி ஸ்ரீ வெங்கடாஜலபதி ஆலய நித்திய பூஜைக்கு ஒரு அர்ச்சகர் அவசரமாகத் தேவைப்பட்டார். மன்னன் மஹான் ஸ்ரீ பாதராஜ ஸ்வாமிகளை அணுகி ஆலோசனை வேண்டினுன். ஸ்ரீ பாதராஜர் தன் பிரதான சிஷ்யரான ஸ்ரீ வியாஸ தீர்த்தரை திருப்பதி சென்று ஆலய பூஜையை உடனே ஏற்குமாறு கூறினுர். அதன்படி ஸ்ரீ வியாஸதீர்த்தர் திருமலைக்குச் சென்று அங்கேயே தங்கியிருந்து ஸ்ரீ வெங்கடேசனுக்கு வியாழக்கிழமைதோறும் மாலை வேளையில் பூஜையை நடத்தி வந்தார். அச்சமயம் பெருமாளுக்குப் பூலங்கி சேவா என்னும் சிறப்பு அலங்காரம் நடைபெறும். மலைவாழ் வேடன் கோலம்பூண்டும் இடுப்பில் தொங்கும் கூர்வாளுடனும் உடல் முழுவதும் மலரை அங்கியாக அணிந்துகொண்டும் (பெருமாள்) பயங்கரத் தோற்றத்துடன் விளங்குவார். கோயில் அர்ச்சகர்களே கண்டு நடுங்குவார்கள். இவ்விதம் பனிரெண்டு ஆண்டு காலம் ஸ்ரீ வியாஸ தீர்த்தர் ஸ்ரீ வெங்கடேசனைத் தொட்டு ஆராதிக்கும் பெரும் பாக்கியத்தைப் பெற்று இருந்தார். பின்னர் பூலங்கி சேவா சமயம் பகவான் அடையும் பயங்கரத் தோற்றத்தை அகற்றி பரம சாந்தமாய் காட்சி கொடுக்கும்படியான கிருபையை வேண்டிப் பெற்ருர். அர்ச்சகர் பரம்பரையில் ஒரு சிறுவன் அங்கு வளர்ந்து வருவதையும் அர்ச்சகருக்குரிய தகுதியை அடைந்து இருப்பதையும் கண்டு ஸ்ரீ வியாஸதீர்த்தர் அவனை அழைத்து தான் செய்து வந்த பூஜா கைங்கர்யத்தை ஒப்புவித்துவிட்டு சஞ்சாரம் செய்ய வெளியில் புறப்பட்டு விட்டார். சாலுவ நரஸிம்மன் ஸ்ரீ வியாஸதீர்த்தரை ராஜகுருவாக பிரகடனம் செய்தான். பின்னுல் இவரே "ஸ்ரீ வியாஸராஜர்" என அழைக்கப்பட்டார்.

தகவல் : ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

வாலைத் தூக்கியிருப்பாய்! நீ யாரோ? எவனோ? பாவம், பொய் பேசிவிட்டு விழிக்கிறாய். பொய் பேசுபவர்களை நான் சும்மா விடுவதில்லை.

**வீமன் :**

(தனக்குள்) ஐயோ! இதென்ன அவமானம்! ஒரு கிழக்குரங்கின் வாலை என்னால் அசைக்கக் கூட முடிய வில்லையே! மரங்களைப் பிடுங்கியும் மலைகளைப் பெயர்த்தும் விளையாடிய என் வீரம் எங்கே போயிற்று? கண்ணா இதென்ன சோதனை! உன் அருளின்றி எதுவுமே நடவாது!

(வாய்விட்டுக் கூறுகிறான்) ஆஞ்சநேய அண்ணா! உம்மை இகழ்ந்து கூறிய இந்தக் கிழக்குரங்கை நான் கொல்லாமல் போக மாட்டேன். அது முடியவில்லையென்றால் நான் இங்கேயே மாண்டு போவேன். இது சத்தியம்!

**அனுமர் :**

அப்பா! எதற்காக அவசரப்பட்டுச் சத்தியம் செய்கிறாய்! வீமன் என்று பொய் பேசிய உன்னை மன்னித்து விடுகிறேன். ஆனால் அந்த ஆஞ்சநேயரைப் பற்றி மட்டும் என்னிடம் உயர்வாகப் பேசாதே! உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள் தருகிறேன்.

**வீமன் :**

எனக்கு நீ வரம் தருகிறாயா? என் அண்ணாவை இகழ்ந்து கூறிய உன்னிடமா வரம் கேட்பேன். இப்போது பார்! என அண்ணன் ஆஞ்சநேயரின் மீது ஆணை. உன் வாலைத் தூக்கி நிறுத்துகிறேன். (இரு கண்களையும் மூடித் தியானித்தவாறே குனிகிறான்) ஆஞ்சநேய அண்ணா! நீர் எனக்குத் தமையன் என்பது உண்மையானால், இந்த வாலை ஒரு துரும்பைத் தூக்குவது போலத் தூக்கி எறிய எனக்கு அருள்புரிய வேண்டும்!

(வால் தானாகவே உயருகிறது. அனுமர் வீமனை அணைத்துக் கொள்கிறார்.)

**அனுமர் :**

தம்பி! என்னை யாரென்று எண்ணுகிறாய்! இரவு பகலாக இராம நாமத்தையே உச்சரித்துக் கொண்டு இராம பிரானையும் சீதா பிராட்டியையும் நெஞ்சில் நிறுத்தி வழிபட்டு வருபவனாகிய நான் உன் அண்ணன் அனுமன் தானப்பா!

**வீமன் :**

அண்ணா! நீங்களா! உங்களோடா நான் இதுவரை மனம் போன வாக்கில் பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடுங்கள் அண்ணா! உங்களைக் கண் குளிரக் கண்டேன்! என் கண்கள் செய்த புண்ணியம்தான் என்ன? நான் என் பிறவிப் பயனை அடைந்து விட்டேன். அண்ணா! அண்ணா!

(உணர்ச்சி மிகுதியால் கண்களில் நீர் வழியச் சாஷ்டாங்கமாய் ஆஞ்சநேயர் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகிறான்.)

**அனுமர் :**

தம்பி! எழுந்திரு, நீ யார் என்பது எனக்கு முன்பே தெரியும். உன்னுடன் சிறிது நேரம் விளையாடிப் பார்த்தேன். உனக்கு உதவி செய்வதங்காகவே உன்னிடம் கொஞ்ச நேரம் வேடிக்கையாகப் பேசி மகிழ்ந்தேன்.

தம்பி! நீ தேடிப் போகும் சுகந்த மலர் குபேரனுடைய தோட்டத்தில் உள்ளது. அதைச் சுற்றிலும் பலத்த காவல் போடப்பட்டுள்ளது. உன்னிடம் வாய்மையும் தூய்மையும், நல்லறிவும் நற்குணமும் பொருந்தியிருப்பதால் வெற்றி உனக்கே கிட்டும். சென்று வா! உனக்கு என் நல் வாழ்த்துக்கள்.

**வீமன் :**

அண்ணா! தங்களின் நல்வாழ்த்தும், கண்ணபிரானின் திருவருளும் இருக்கும்போது எங்களுக்கென்ன குறை!

**அனுமர் :**

தம்பி என் வாழ்த்துக்கள் எப்போதும் உங்களுக்கு உண்டு. நீ விரும்பும் வரம் ஏதேனும் ஒன்றைக் கேள். அப்போது தான் எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும்.

**வீமன் :**

அண்ணா! கானக வாழ்க்கை முடிந்து நாங்கள் துரியோதனுதியருடன் போர் புரிய நேர்ந்தால், அப்போது தாங்கள் எங்களுக்குத் துணையாக இருந்து உதவி புரிதல் வேண்டும்.

**அனுமர் :**

தம்பி! அப்படியே செய்வேன்! நிகழ இருக்கும் போரில் அருச்சுனன் தேரின்மீது பறக்கும் கொடியில் அமர்ந்து உங்களுக்கு வெற்றியுண்டாக அருள்வேன்! வேறு ஏதேனும் ஆசையிருந்தால் கேள்!

**வீமன் :**

அண்ணா! தங்களின் விசுவருப தரிசனத்தைக் காண விரும்புகிறேன்.

**அனுமர் :**

என் பெருவடிவத்தைக் காட்டுகிறேன். அதைக் கண்டு அஞ்சாதே! (ஆஞ்சநேயர் விசுவரூபம் எடுக்கிறார். அது கண்டு வீமன் அச்சமும் ஆனந்தமும் பக்தியும் கொண்டு வலம் வருகிறான்.)

**வீமன் :**

அண்ணா! தங்கள் வடிவத்தைச் சுருக்கிக் கொண்டு விடை தாருங்கள். இந்தக் காட்சி என் நெஞ்சைவிட்டு எந்நாளும் நீங்காது.

**அனுமர் :**

தம்பி! நீ மேற்கொண்ட செயல் இனிதே வெற்றி பெறும்! நீ விரும்பிய வண்ணமே அனுமக் கொடியாகப் பறந்து போரில் வெற்றியும் நல்குவேன். சென்று வா! உனக்கு அண்ணனின் அன்பான நல்வாழ்த்துக்கள்.

*

#  மயில் குயிலாச்சு ! 

தில்லைச் சிற்றம்பலத்திலும், சிந்தையெனும் தாமரையில் கட்டைவிரலளவு சுடர்விடும் வெட்ட வெளியிலும் உள்ளது ஒன்றே. அருட்பெருஞ்சோதி அதுவே.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"
*(திருவாசகம் அருட்பத்து 1)*

என இறைவனை ஒளியுருவினனாக வருணிப்பர் மணிவாசகர். அவ்வருட்பெருஞ்சோதியே ஆன்மாவின் நிஜ சொரூபம்.

மலம் எனும் மையிருட்டு மறைப்பதால் ஆன்மா தன் நிஜசொரூபம் தரிசனமாகாமல் எண்ணிறந்த ஜன்மங்களில் அதைத் தேடி அலைகிறது. உபநிடதபாணியில் கூறுவதானால், எதைத் தேடி அலைகிறதோ அதுவே அதன் நிஜ சொரூபம்.

ஆன்ம தரிசனம் கிட்டிவிட்டால் அருட்பெருஞ்சோதியுள் ஐக்கியமாகலாம்; சிவானுபூதியில் திளைக்கலாம். அத்தகைய சிவானுபோகம் வாய்க்கப்பெற்று, வாழையடி வாழையென வந்தத் திருக்கூட்ட மரபினில் அருட்பிரகாச வள்ளலார் சென்ற நூற்றாண்டில் நம் முன்னோரிடையில் வாழ்ந்திருந்த சித்த மகா புருஷர்; சாகா வரம் பெற்ற சச்சிதானந்த யோகியர்.

அம்பலத்தாடும் அருட்பெருஞ்சோதியில் ஒன்றி ஐக்கியமாவதே சுவாமிகளின் அவதார நோக்கம். இப்பிறவியில் அது நிறைவெய்தியது. அவர்களுக்குக் கிட்டிய அச்சீவ பிரம்ம ஐக்கியம் இச்சகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் சித்திக்க வேண்டுமென்ற பெருங்கருணையால் அவர்கள் நம்மோடு வாழ்ந்திருந்தார்கள். அருட்பெருஞ்சோதியைத் தம் ஆன்ம நேயத்தால் மற்றவர்களும் பெற்றுய்யும் பெருவழி காட்டினர்கள்.

ஆன்மாவை மறைக்கும் ஆணவ மலத்தினையும் அம்மலமறும் சுத்தி நிலையில் சித்திக்கும் ஆன்ம தரிசனத்தையும், அவர்கள் தம் திருவருட்பாவில் 'அக்கச்சி' என்ற திருப்பாடலில் அழகிய உருவகப்பாங்கில் உணர்த்தியருளினர்.

வள்ளல் பெருமானது திருவுள்ளத்தில் ஓர் அற்புதக் காட்சி தோன்றுகிறது. அவ்வகக் காட்சியில் அவர்கள் தம் திருமேனி சிலிர்க்க தீங்கவிதை இசைக்கிறார்கள்.

"வானத்தின் மீது மயிலாடக்
கண்டேன்—அக்கச்சி
மயிலாடக் கண்டேன்"

ஒரு குழந்தையின் குதூகலத்தோடு வியந்து கூத்தாடுகிறார்கள். மயில் வனத்தில் ஆடும். வானத்தில் ஆடுமா? ஆம், ஆடுகிறது.

வானம், எப்படிப்பட்ட வானம்? பிரம்மாண்டமான எண்ணிறந்த கோளங்களைத் தன்னகத்தே கொண்ட அடி முடியற்ற அகண்ட பெரு வானம். ஆனந்தக் கூத்தனின் அற்புதப் பனிச் சறுக்காட்டத்தில் சிதறிடும் பனிக்கட்டிகளென எண்ணற்ற விண்மீன்கள் இரைந்து கிடக்கும் விரிந்த பெரு வானம்.

அளவற்ற கோளங்கள் சுற்றிச் சுழன்றாலும் ஒன்றோடொன்று குறுக்கிட்டுக் கொள்ளாமல் ஓர் ஒழுங்கான நியதிக்குட்பட்டுச் சுற்றி வரும் அதிசயத் தன்மை கொண்ட அண்டப் பெருவெளி!

"அண்டப் பகுதியின் உண்டைப்
பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங்
காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில்
பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட
விரிந்தன".
*(திருவாசகம் : திருவண்டப் பகுதி, 1-4)*

அகண்டாகாரத்தில் சுற்றிச் சுழலும் கோளங்கள் எண்ணற்றவை, எண் கடந்தவை, எண்ண எண்ண எட்டாதவை, எழில் கொழிப்பவை என்று மணிவாசகப் பெருமான் அதிசயிக்கின்றார்கள். அத்தகைய அண்டப் பேரனுபவம் வள்ளலார் சுவாமிகளுக்கு வாய்க்கப் பெற்றிருந்தது. அதனால்தான் வானப் பெருவெளியை அரங்கமாக்கி வண்ணமயிலை ஆடவிட்டிருக்கிறார்கள்.

---

திரு. சி. முருகானந்தம் — சென்னை.

---

அகண்டாகாரத்தில் அழகு மயில் ஆடுகிறது. வண்ணத் தோகை விண்ணில் விரித்து வயிரமணியென ஒளி வீசி நடம் புரிகிறது. எண்ணற்ற விண்மீன்கள் தோகைக் கண்களென சுடரொளி வீச ஆனந்த நடனம் அரங்கமின்றி நடக்கிறது. கான மயிலின் களி நடனம் கவியின் மனத்தை மயக்குகிறது.

வான் மயிலின் வண்ண நடம் சில கணங்களிலேயே மின்னி மறைகிறது. எண்ணிலா வண்ணக்கோலங்களும், ஈடிலா நடனத் தோற்றங்களும் சென்றவிடம் தெரியவில்லை. சுவாமிகள் திகைக்கிறார்கள்; பின் தேறுகிறார்கள்.

# முருக தரிசனம்

"அத்ரி"

கொம்பானை ஒன்று உன் கூடப் பிறந்தது—இரு
கொங்கை கொண்ட தெய்வ யானை கொழுந்தியானது!
உம்பர் உலகம் அனைத்தும் உன்றன் சேனையானது
உயர்ந்த மலைகளனைத்தும் உன்றன் கோயிலானது
வம்பரான அவுணர் கூட்டம் வகையிழந்தது—அன்னை
வயிரவேல் அவ்வசுரர் தம் பகை யொழிந்தது!
நிம்மதிதான் அன்றே ஏழுலகும் பெற்றது—முருகா
நினதானை யெங்கெங்கும் கொடிவீசிப் பறந்தது!
கொடியினிலே கோழி கூவி ஒலித்தது—தெய்வக்
கொள்கை அதிலெதிரொலித்து முழக்கம் செய்தது!
துடியிடையுடை வள்ளிக் குறத்தி—ஒரு
துணையாகி உன் தொடைதனில் அமர்ந்தது!
நடை பயிலும் நாட்டிய மயில் அது — நல்ல
நங்கையிருவருக்கும் இடங் கொடுத்தது!
கடையனேன் என் கண்கள் அக்காட்சி பெற்றது—இனி
காணத்தக்கது வேறுண்டோ இக்காசினிமேலே?

" வானத்தின் மீது மயிலாடக்
கண்டேன்
மயில் குயிலாச்சுதடி — அக்கச்சி
மயில் குயிலாச்சுதடி! "

அழகு மயில் ஆடிய இடத்தில் இப்போது ஆட்டமோ அழகின் ஆரவாரமோ ஒரு சிறிதும் இல்லை. ஆர்ப்பரிப்பு முற்றிலும் அடங்கிய நிலையில் குயிலின் இனிய குரல் எங்கும் பொங்கி வழிகிறது. வானமெங்கும் தனது வண்ணத்தோகையால் நிறைத்து வர்ண ஜாலம் புரிந்து கொண்டிருந்த மயிலுக்குப் பதிலாக இப்போது ஒரு குயிலின் இனிய குரல் மட்டுமே அமைதியாக ஒலிக்கிறது.

வானப்பெருவெளியெங்கும் குயிலின் நாதவெள்ளம் பிரவகித்து நாற்றிசையும் நிறைகிறது. குயிலோசையொன்றே பிரபஞ்சமெங்கும் வியாபித்து அகிலாண்டகோடியெங்கும் நாதபிரம்ம மயமாகத் திகழ்கின்ற நாதாந்தப் பேரனுபவத்தில் நம் வள்ளல் பெருமானுக்கு ஓர் அபூர்வ மெய்யறிவு கிட்டுகிறது. இதற்கு முன் தோன்றிய மயிலின் ஆட்டம் மெய்யன்று. இப்பொழுது பாடும் குயிலின் நாத வடிவமே எக்காலும் அழியாத பேருண்மை என்பதை ஓர்ந்து உணர்ந்து கொள்கிறார்கள்.

பரம்பொருள், நாதம் அல்லது ஓசையின் வடிவமான நாத பிரம்மமாகவும், அதே சமயம் நாதத்திற்கு அப்பாற்பட்ட நாதாதீதமாகவும் விளங்குகின்றது. நர்தத்தின் ஸ்தூலத் தோற்றமே இப்பிரபஞ்சமனைத்தும் என்ற தத்துவ ஞானத்தை நமக்கு உணர்த்தியருள்கிறார்கள்.

'மயில் குயிலாச்சுதடி!' என்ற மறைமொழிக்குப் பிறகு அவர்தம் முதற்கண்ணி நின்று விடுகிறது. ஆனால் அவர்கள் நம் உள்ளத்தில் தீட்டிவிட்ட தத்துவக் காட்சி இப்போதுதான் அதன் உச்சக்கட்ட அழகினை எட்டுகிறது. 'மயில் குயிலாச்சு' என்ற ஒரு சாதாரண சொற்றொடரில் ஓர் அசாதாரண படிமக் காட்சி (Imagery)யை நம் கண் முன்னர் விரிக்கின்றனர்.

தமது இதயக் காட்சியை சுருக்கமாகவும் அதே சமயம் மிகத் துல்லியமாகவும் வர்ணிக்கின்றனர். உள்ளத்துக் காட்சிகளை ஒரு சில வார்த்தைகள் கொண்டு உருவகப் படிமம் செய்கின்றனர். அதனைப் பயில்கின்ற நம் உள்ளத்தில் கற்பனை ஆழமும் செறிவார்ந்த தத்துவ உணர்வும் எழும்பித் திரள்கிறது.

அக்காட்சியால் அடிகளார் கொண்ட அதே உணர்வினையும் கருத்தையும் நாமும் அடைகிறோம். அவர்களுக்கு ஏற்பட்ட அதே தாக்கம் நம்மிடத்தும் உண்டாகிறது. அவரது அசாதாரணமான எல்லைக் கடந்த அனுபவங்களில், இதய உணர்வில் நாமும் கலந்து விடுகிறோம். உருவகப் படிமம் என்ற இலக்கிய அணிக்கு வள்ளல் பெருமானது இத்திருப்பாடல் தலை சிறந்த எடுத்துக்காட்டு எனலாம்.

வண்ணத்தோகை விரித்தாடிய வான்மயில் கட்டற்ற ஐம்புல உணர்வுகளின் உருவகமாகவும், அமைதியாக ஒலித்த குயிலோசை ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்ட ஆன்மப் பெருநிலையின் உருவகமாகவும் கொள்ளலாம்.

பொறிகளின் ஆட்டம் புள்ளி மயில் ஆட்டம். ஆடும் புலனைந்தும் அடங்கி விட்ட ஆன்மானுபவத்தில் குயில் கூவும். இது சோலைக் குயிலன்று; 'லோகம் பாவனை'க் குயில். கூவுதலாவது யோக தாரணையில் ஆறுதாரத்தில் ஒலிக்கும் நாத பிரம்மம். அதனால்தான் மயில் குயிலானதை சுவாமிகள் மகிழ்ச்சியோடு அக்கச்சியிடம் அறிவிக்கிறார்கள்.

மயில் என்பது மாயை. ஆணவ, கன்ம மலங்களே அதன் ஆட்டம். மலம் அறுபட்டால் ஆட்டமில்லை; ஆனந்தம், ஆனந்தமே.

மயிலின் ஆட்டத்தில் மனம் மயங்கித் துள்ளுகிறது. எனவே சுவாமிகள்,

"துள்ளலை விட்டுத் தொடங்கினேன்
மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி — அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி"

என்று தமது உருவகத்திற்கான விளக்கத்தினை முத்தாய்ப்பு வரிகளாக வைத்து கவிதையைத் தொடுக்கின்றனர்.

துள்ளல் என்பது ஜீவ உபாதைகளையும், மன்றுடும் வள்ளல் என்றது சிவபெருமானையும் உணர்த்துவனவாகும். துள்ளலை விட்டால் வள்ளலைக் காணலாம். பாச மலம் அறுபட்டால் பரம்பொருளைச் சேர்ந்திடலாம். மயில் குயிலானது போல் சீவன் சிவனுகும்.

இருள் சோதியானல் இன்பம் தானே. நில்லாத இவ்வுடல், உலகினை நாம் விட்டுவிட்டால் நித்தியப் பொருள் சித்திக்குமன்றே? அதனுல் தான் சுவாமிகள்,

"வெவ்வினைக் காடெல்லாம் வேரோடு
வெந்தது
வெய்ய மாமாயை விரிவற்று
நொந்தது".

என்றனர் வேறேரிடத்தில்.

வெவ்வினைக் காடு என்பதும், வெய்ய மாமாயை என்பதும் மயிலைக் குறிப்பன. அவை வெந்து அழிந்து வேரோடு போனபின்,

"செவ்விய ஞானம் சிறப்புற வந்தது
சித்திகள் யாவையும் செய்திடத்
தந்தது",

என்றருளிச் செய்தனர். இச் செவ்விய ஞானமும் சித்தியுமே சுவாமிகள் தம் ஆன்ம தரிசனத்தில் கண்ட குயிலாகும். மயில் குயிலாச்சு; மாயை அழிந்து சத்திய ஞானம் வந்தாச்சு.

தத்துவத்தைக் தெற்றென விளக்குவான் வேண்டி இன்னொரு உவமானத்தை நம் முன் வைக்கிறுர்கள்.

"பொய்யை யொழித்துப் புறப்பட்டேன்
மன்றுடும்
ஐயரைக் கண்டேனடி — அக்கச்சி
ஐயரைக் கண்டேனடி"

இந்த உடல் பொய்; இந்த உலகம் பொய். நாம் கண்கூடாகக் காண்கிறேம்; கிழக்கெழுந்து சுடர் விடும் ஞாயிறு மேற்கே விழுந்து மறைகிறது. குழக்கன்று மூத்து, எருதாகிச் சில ஆண்டுகளில் செத்து விழுகிறது. ஆனல், விழியிலா மாந்தர் இவற்றைக் கண்டு தேறுவதில்லை.

இளமை நிலைப்பதில்லை; இந்த யாக்கை நிலைப்பதில்லை. உலகம் நிலைப்பதில்லை; அதில் உயிர்கள் நிலைப்பதில்லை; இவற்றை நாம் ஒரு பொழுதும் உணருவதில்லை.

நில்லாத இப்பொய்மைகளை நிலையானதாக எண்ணுவது நமது அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத் திரை யகன்றல் 'மன்றுடும் ஐயரை'க் காணலாம். மயில் குயிலானது போல் பொய் ஒழிந்து மெய்யாகும்.

வள்ளல் பெருமான் பொய் களைந்து மெய் கண்டவர்கள்; துரிய நிலையில் ஜோதி கண்டு, ஜோதியில் ஐயர் நடஞ் செய்யும் மணி வீடு கண்டவர்கள். ஆணிப் பொன் அம்பலத்தே அற்புதக் காட்சி கண்டவர்கள்.

சிற்றம்பலத்தான் தம்மை சிவமாக்கிக் கொண்ட பெரும் பேற்றினை சுவாமிகள் பல இடங்களிலும் பாடியுள்ளனர்.

"இரவு விடிந்தது இணையடி
வாய்த்தன
பொழுது விடிந்தது பொற்பதம்
வாய்த்தன".

என்று ஆனந்தக் களிப்பெய்தினர்.

இரவு விடிதலும், பொழுது விடிதலும் மலப் பிணிப்பு நீங்கும் நிலையினைக் குறிக்கும். இணையடி வாய்ப்பதும், பொற்பதம் வாய்ப்பதும் பிறவிப் பெரும் பேறன்றே!

அப்பெறற்கரும் பேற்றினைத் தாம் பெற்றிருந்தமையால்தான், மல கன்மங்கள் உயிர்களைப் பிணித்து நிற்கும் நிலையினை மயிலெனவும், மண்டும் மலம் அறுத்து மனத்திலே தானுமற்ற ஜீவன்களின் முக்தி நிலையினைக் குயிலெனவும் மொழிந்தருளினர்.

இங்ஙனம், வள்ளலார் சுவாமிகளுக்கு மயில் குயிலாச்சு. தீனம் தவிர்ந்து திரையற்று விட்டது. ஞானம் உதித்தது; நாதம் ஒலித்தது. உள்ளிருள் நீங்கிற்று; உள்ளொளி ஓங்கிற்று. பேதங்கள் நீங்கப்பெற்று எவ்வுயிரும் சிவமாய் எண்ணி உவக்கும் உள்ளத்தில்தான் இறைவன் சுத்த சித்துருவாய் நடம் புரிகிறுன் என்ற கொள்கையுடையவர்கள் சுவாமிகள்.

அருள் உள்ளத்தில்தான் அருட்பெருஞ்சோதி ஒளிர் விடும். வாடியப் பயிரைக் கண்ட போதெல்லாம் வாடியவர்கள் சுவாமிகள். கல்லுருவின் மீது கூட அவர்தம் கருணையுள்ளம் நெகிழ்ந்துருகியது. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்வதே தமது பேராய நோக்கமாகக் கொண்டிருந்தனர். அவர்களுடைய தனிப் பெருங்கருணையே அருட்பெருஞ் ஜோதியாக அவனியெலாம் சுடர் விடுகிறது!

எண்ணிலாத ஆன்மாக்களின் ஊன சம்பந்தமான இந்த உடலும், பிரபஞ்சமும் சுவாமிகளின் ஞானக் கண்களுக்கு மயிலாகவும், பிறவிப் பிணியை அறுத்துப் பேரின்பப் பெருநிலைகாணும் ஜீவன் முக்தர் குயிலாகவும் அவர்தம் ஆன்ம தரிசனத்தில் தோன்றியது. அதனை, 'மயில் குயிலாச்சு' என்ற உருவகப் படிமத்தால் நமக்கு உணர்த்தியருளினுர்கள். அவர்கள் நமக்களித்திருக்கும் அலையிலா சிவஞான வாரிதியை அன்பர் யாவரும் பெற்றுய்வாராக!

*

# முன் வினையின் பலனும் ஸதாசாரத்தின் சிறப்பும்

பாண்டவர்கள் காம்யக வனத்தில் வசித்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு நாள், அர்ஜுனனுடைய நண்பர் பிரம்மணர் ஒருவர் வருகை புரிந்தார். பரஸ்பரம் உபசரிப்புகள் முடிந்த பிறகு, பாண்டவர்களை நோக்கி பிராம்மணர், "பாண்டவர்களே பகவான் வாஸுதேவர் இங்கு வரப் போகிறார். அவர் உங்களைப் பற்றியே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கிறார். உங்களுடைய க்ஷேமத்தில் விருப்பமுள்ள அவர் உங்களைப் பார்க்க வேணுமென்று ஆசைப்படுகிறார். சிரஞ்சீவியான மார்க்கண்டேய மகரிஷியும் உங்களைப் பார்ப்பதற்குச் சீக்கிரமே வருவார்" என்று சொன்னார்.

அந்தப் பிராம்மணர் அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே ஸ்ரீக்ருஷ்ணன் சைப்யம், ஸுக்ரீவம் என்ற குதிரைகள் பூட்டிய ரதத்தோடு காணப்பட்டார். அவர் ஸத்யபாமையுடன் வந்தார். ரதத்திலிருந்து க்ருஷ்ணன் இறங்கியதும் முறைப்படி தர்ம ராஜரையும், பீமஸேனனையும் ஸேவித்தார். அர்ஜுனனைக் கட்டித் தழுவிக் கொண்டு களிப்பெய்தினர். தம்மை வணங்கிய நகுல ஸஹதேவருக்கு அருள் செய்தார். தௌம்யரைப் பூஜித்தார். திரௌபதியை குசலம் விசாரித்தார். நெடுங்காலம் கழித்து வீர நண்பனை அர்ஜுனனைப் பார்த்ததினால் அடிக்கடி தழுவிக் கொண்டார். ஸத்யபாமையும் திரௌபதியைத் தழுவிக் கொண்டாள். பின்னர் பாண்டவர்கள் தௌம்யரை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ண பகவானை பூஜித்தார்கள். பிறகு பரஸ்பரம் குசலப் பிரச்னம் நடந்தது. தர்ம ராஜர் பரம ஸந்தோஷத்துடன் க்ருஷ்ண பரமாத்மாவை க்ருதாஞ்ஜலிபுடராய் ஸ்தோத்திரம் செய்தார்; ப்ரார்த்திக்கலானார்.

"புண்டரீ காக்ஷ! பாண்டவர்களுக்கு நீர்தான் கதி. இது ஸத்யம். பார்த்தர்கள் உம்மையே சரணமாகப் பற்றியுள்ளார்கள். நேரம் வரும் பொழுது எங்களுக்கு நல்ல காரியத்தை நீர் செய்வீர். அதில் ஸந்தேஹமில்லை. ஜன ஸஞ்சாரமில்லாத காடுகளில் பன்னிரண்டு வருஷங்களை ஸுகமாகக் கழித்தோம். ஒரு வருஷம் அஜ்ஞாத வாஸத்தையும் முடித்து விட்டு உம்மை அடைவோம். இதையே நாங்கள் ஸதா சொல்லிக் கொண்டிருக்கிறோம். நாங்கள் சொன்ன சொல் தவறுதவர்கள். தான, தர்மங்களைச் செய்து வருபவர்கள். நாங்கள் மனைவிமார்களுடனும் பந்து மித்திரர்களுடனும் எங்களைச் சார்ந்த ஜனங்களுடனும் உம்மையே ரக்ஷகராக வரிக்கிறோம். நீரே எங்கள் ரக்ஷகர்" என்று விண்ணப்பித்தார்.

பகவானும் தர்ம ராஜரும் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது தவத்தினால் முதிர்ந்தவரும், பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக ஜீவித்திருப்பவரும், மூப்பில்லாதவரும், மரணமில்லாதவரும், தர்மாத்மாவும், ஔதார்ய குணமும், ஸ்ரீ காயத்ரீ மஹா மந்த்ர அப்பியாசத்தினால் நல்ல தேஜஸ்ஸும், நல்ல அழகும் உடையவருமான மார்க்கண்டேய முனிவர் இருபத்தைந்து வயதுள்ளவர் போன்ற தோற்றமுடையவராய் அங்கு வந்து சேர்ந்தார். அம்மாமுனிவரை பாண்டவர்கள் வரவேற்று பூஜித்தார்கள். அவர் உட்கார்ந்து கொண்ட பிறகு பகவான் அவரைப் பார்த்து,

"மார்க்கண்டேய மகரிஷியே! பாண்டவர்களும், இங்கு குழுமியிருக்கிற பிராம்மண ச்ரேஷ்டர்களும், நானும், ஸத்யபாமையும், திரௌபதியும் உம்மிடமிருந்து உயர்ந்த தத்வங்களையும், இதிஹாஸங்களையும், கதைகளையும், அரசர்கள், ஸ்திரீகள், ரிஷிகள் இவர்களுடைய பழமையான ஸதாசாரங்களையும் கேட்க விரும்புகிறோம்." என்று சொன்னார்.

அப்பொழுது தேவ ரிஷியான நாரத மகரிஷியும் பாண்டவர்களைப் பார்ப்பதற்கு அங்கு வந்து சேர்ந்தார்.

பாண்டவர்கள் நாரத மகரிஷிக்கு அர்க்ய, பாத்ய, ஆசமனீயாதிகளை ஸமர்ப்பித்து நன்கு பூஜித்தார்கள். அவர் எல்லோரையும் குசல ப்ரச்னம் செய்து விட்டு உட்கார்ந்து கொண்டார். அங்குள்ளவர் யாவரும் மார்க்கண்டேய மகரிஷி சொல்லப் போகும் கதையைக் கேட்க விருப்பமுடையவர்களாக இருப்பதை அறிந்தார்.

திரு. கோ.கா.வா. பாவனுச்சார்யாசுவாமி
*திருச்சி-6.*

தர்ம புத்திரர் மகரிஷியிடம், "முனிச்ரேஷ்டரே! நாங்கள் ரொம்ப நாட்களாக தேவரீரை அடைந்து நல்லுபதேசத்தைப் பெற வேணுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்த ஸமயம் வாஸுதேவரும் எங்களைப் பார்ப்பதற்கு இங்கு வந்திருக்கிறார். நல்ல கர்மங்களையோ, கெட்ட கர்மங்களையோ மனிதன் செய்கிறான். அவனவன் செய்த வினைப் பயனை அவனவன் அனுபவிக்கிறான். அவரவர்கள் செய்யும் புண்ய பாபங்கள், இந்த சரீரத்திலேயே பின் தொடரு

(33-ம் பக்கம் பார்க்க)

# ஓம்

இந்தியச் சமயங்களில் ஓங்காரம் இணையற்ற இடத்தைப் பெற்றுள்ளது. இந்த இணையற்றப் பெருமைக்கு இந்தியத் தத்துவ ஞான நூற்களும் புனித மறைகளும் இச்சொல் குறித்துத் தரும் விளக்கங்களே காரணமாகும்.

**பெயர் விளக்கம் :**

இச்சொல் முழுமுதற் கடவுளாகிய பரம்பொருளை அனைத்து வகையாலும் ஒத்துள்ள நிலையில் விளக்கப்படுகின்றது. இது பொதுவாக 'ஓம்', 'ஓங்காரம்' என்று அழைக்கப்படுகின்றது. எனினும் இதற்குச் 'சப்த பிரம்மம்', 'அட்சர பிரம்மம்', 'பிரணவம்' போன்ற வேறு பெயர்களும் உள்ளன. சப்த என்பது இச்சொல் பெற்றிருக்கும் ஒலி வடிவினையும் அட்சர என்பது என்றும் அழியாத அமரத்துவ நிலையினை இது பெற்றிருத்தலையும் உணர்த்துகின்றன. பிரம்மம் என்பது உள்ளுயிராக இருந்து நடத்துகின்ற பரம்பொருளை உணர்த்துவதாகும். பிரணவம் என்பது பிர என்னும் சொல்லும் நவ(ம்) என்னும் சொல்லும் சேர்ந்த கூட்டுச்சொல் ஆகும். பிர என்பதற்குத் தொன்மை என்றும் நவ(ம்) என்பதற்குப் புத்தம் புதுமை என்றும் பொருள் ஆகும். ஓங்காரம் தொன்மையும் புதுமையும் உடையது என்பது இதன் பொருள். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகவும் பின்னைப் புதுமைக்கும் பின்னைப் புதியதாகவும் ஆகிய ஓங்காரம் கால எல்லைக்கு அப்பாற்பட்டது என்பதே பிரணவம் என்பது உணர்த்தும் தத்துவமாகும்.

சாந்தோக்கிய உபநிடதம் (1:1-2, 9, 6:7) ஓங்காரத்தினை 'உத்கீதம்' என்று குறிப்பிடுகின்றது. வேதங்கள் யாவற்றிற்கும் தொடக்கமாக இருப்பதோடு அவை கூறும் தத்துவச் செய்திகள் அனைத்தின் சாரமாகவும் இருப்பதனாலும் தீமைகளிலிருந்து விடுவித்து, உயிர்களை ஈடேற்றுவதனாலும் ஓங்காரத்தினை இந் நூல் உத்கீதம் என்று சுட்டுகின்றது.

ஓம் என்பதன் பொருள் 'ஆம் (ஆகும்)' என்பதாகும் (திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் 38:4, சுப்பிரமணிய பாரதியார் பாடல்).

இந்து சமயத்தின் அனைத்துப் பிரிவுகளும் தத்தமது முழுமுதற்கடவுளை ஓங்கார சொரூபம் உடையதாகக் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாகச் சாக்தர்கள் பராசக்தியை 'ஓங்காரி', 'ஓங்கார சொரூபி' என்று கூறுவதையும், காணபத்தியர்கள் விநாயகரை ஓங்கார வடிவம் உடையவர் என்று கொண்டு 'ஓங்கார சொரூபன்', 'பிரணவ மூர்த்தி' என்று கூறுவதையும் சுட்டிக் காட்டலாம்.

**ஓங்காரமும் விநாயகரும் :**

தமிழின் ஓம் என்னும் எழுத்து வரி வடிவம் யானை முகத்தை உடைய விநாயகர் பெருமானின் உருவத்தினை ஒத்துள்ளது என்று விளக்கம் தருவர். வலது புறத்திலுள்ள நுனி ஒடிந்த கொம்பிலிருந்து தொடங்கி, இடது நோக்கி வளைந்து, மகுடத்தைச் சூழ்ந்து கவிழ்ந்து, கீழ்நோக்கி இறங்கி, வலப்புறமாக வளைந்து, இடது புறத்திலுள்ள கொம்பினைச் சுற்றித் துதிக்கை வழியாக இறங்கி, அக் கையிலுள்ள மோதகத் சுற்றிச் சுழித்திருக்கும் வகையில் ஓம் என்னும் வரி வடிவம் அமைந்துள்ளது. இதில் ம் என்பது மோதகத்தை உணர்த்தும் வடிவமாகும். மோதகமும் மகரமும் பிரம்ம ஞானமாகிய மெய்யறிவின் அடையாளங்கள் ஆகும். விநாயகர் காணபத்தியம் என்னும் இந்து சமயப் பிரிவினரின் முழு முதற்கடவுளாகக் கருதப்பட்டிருந்த போதிலும், இன்று இந்து சமயத்தின் அனைத்து மக்களாலும் முதற் கடவுளாக மதிக்கப் பெற்று வழிபடப்பட்டு வருகின்றார். சைவக் கோவில்களின் முன்னரும் சக்தி மற்றும் முருகன் கோவில்களின் முன்னரும் விநாயகர் சிலையோ கோவிலோ அமைக்கப் பெற்று முதல் வழிபாடு செய்யப்படுகின்றது. வைணவக் கோவில்களில் விநாயகர் 'தும்பிக்கை ஆழ்வார்' என்ற பெயரில் வழிபாட்டினை ஏற்று வருகின்றார். விநாயகர் மெய்யறிவின் அடையாளமாக விளங்குகின்றமையால் அவரை நூல்கள் எழுதுவோரும் கலை நிகழ்ச்சி நடத்துவோரும் முதற் கடவுளாக ஏற்றுத் துதி பாடிய பின்னரே தத்தமது தொழிலைத் தொடங்குகின்றனர். விநாயகர்க்கு முதற்பூசை செய்யும் முறைமை ஏனைய தொழில்களைத் தொடங்கும் போதும் முதற்கண் நிகழுகின்றது. விநாயகர் அனைத்து இந்துக்களின் மனத்திலும் முதற் கடவுளாக இடம் பெற்றுள்ளமைக்கு அவரை ஓங்காரத்தோடு இணைத்து விளக்கம் தருவதே காரணம் எனலாம். விநாயகரை வணங்கினால் மெய்யறிவு சித்திக்கும். ஓங்காரத்தை முற்றிலுமாகச் சரியாக உணர்ந்தால் அனைத்தறிவையும் அடைந்த நிலை ஏற்படும்.

**திரு. பெ. சுயம்பு**
**திருநெல்வேலி.**

**அ+உ+ம்>ஓம் :**

ஓம் என்னும் இப்புனிதச் சொல் அ+உ+ம் என்னும் மூன்று எழுத்துக்கள் சேர்ந்து அமைந்துள்ளது என்று சமய நூற்கள் விளக்குகின்றன. இவ்விளக்கத்திற்கு ஏற்றதாகச் சம்ஸ்கிருத ஓம் என்னும் சொல் வடிவம் [ॐ<ओ=[illegible]=अ+S=[illegible] என்பதன் உயிர்மெய் அடையாளம். எ-டு.

# வந்து விடுவாய் கண்ணா!

அந்தரத்தில் தொங்குகின்ற நிலவு ஆகி
ஆற்றுநீரில் வாழுகின்ற மீனுமாகி
அந்தரங்கள் காணுகின்ற காட்சியாகி
அண்டத்தை தாங்குகின்ற சக்தியாகி
மந்திரத்தால் விளைகின்ற நன்மை தீமை
மனிதர்கள் வாழ்விலும் அடியாய் ஆகி
தந்திரங்கள் தருகின்ற வெற்றி தோல்வி
தரணியிலே எல்லாமே ஆன தேவே

பெற்றெடுத்த தாயுமாய் பேதை என்னை
பேணி காத்த தந்தையாகி பருவநேரம்
கற்றுதந்த குருவுமாய் வந்த துன்பம்
கடியதூரம் விரட்டிக்காத்த அம்மானுகி
நற்றமிழாய் உலகத்தில் வாழும் தேனே!
நாயகனே என்நெஞ்சம் வாடல் கண்டாய்
வற்றாத அருட்கடலே வந்ததுன்பம்
வாடிப்போக அருள்வாயே இனியதேவே

வன்சிறையில் வாடியவுன் சீதைபெற்ற
வருத்தத்தை போக்கிடவே விரைந்து வந்தாய்
மென்மனத்து பாண்டவரின் துயரை நீக்க
மேகநிற கண்ணனாக உறவு கொண்டாய்
சின்னபுத்தி முதலைவாயில் பட்டயானை
தர்மதேவுன் உன்னைஅழைக்க வந்து காத்தாய்
தின்மனமோ என்நெஞ்சு துயரம் வேண்டாம்
திருஉருவே ஓடிவந்து காப்பாய் தேவே

**கவிஞர் பொர்மீதாசன் — அரகண்டநல்லூர்.**

ஊ+ம் = ம் ஒலி உடையது] அமைந்துள்ளது. (சம்ஸ்கிருத இலக்கண அறிஞர்கள் ஓ என்னும் எழுத்தினை அகரமும் உகரமும் சேர்ந்த கூட்டெழுத்து (சந்தியக்ஷர) என்று விளக்குவர். இச் சொல்லைப் பிரித்து விளக்கம் தருவதில் சைவர், வைணவர் மற்றும் பிரம்ம வாதிகள் வேறுபடுகின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் அகரத்தைத் தத்தமது முழுமுதற்கடவுளுக்கு உரிய அடையாளம் என்று காட்டுவதில் முனைகின்றனர். எவ்வாறுயினும் மூன்று பிரிவினரும் இம்மூன்று எழுத்துக்களையும் சிவன், விஷ்ணு, பிரம்மன் என்ற மும்மூர்த்திகளோடும் தொடர்புபடுத்திக் கூறுகின்றனர்.

சைவர் அகரம் சிவனையும் உகரம் விஷ்ணுவையும் மகரம் பிரம்மனையும் உணர்த்தும் என்பர். வைணவர் அகரம் விஷ்ணுவையும் உகரம் சிவனையும் மகரம் பிரம்மனையும் உணர்த்தும் என்று விளக்குவர். பிரம்மவாதிகள் அகரம் பிரம்மனையும் உகரம் விஷ்ணுவையும் மகரம் சிவனையும் உணர்த்தும் என்று சாதிப்பர். எவ்வாறுயினும் இவ் விளக்கங்கள் இந்து சமயம் கூறுகின்ற படைப்பு, காப்பு, அழிப்பு என்னும் முத்தொழில்களையும் செய்கின்ற மும்மூர்த்திகளையும் தன்னகத்தே உடைய முழுமுதற்கடவுளை ஓங்காரம் குறிக்கும் வகையில் அமைந்துள்ளன என்பது இங்கு நோக்கத் தக்கது.

ஓங்காரத்தைக் கடவுளோடு சார்த்திக் கூறுவது மட்டுமின்றி, சமயக் கோட்பாடுகளோடு சார்த்திக் கூறும் மரபும் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாக முண்டகோபநிடதமும் திருமந்திரமும் தரும் விளக்கங்களை இங்குச் சுட்ட முடியும்.

முண்டகோபநிடதம் ஓங்காரத்தை அ, உ, ம் என்று பிரித்து விளக்குகின்றது. அதன்படி அகரம், உகரம், மகரம் என்பன முறையே விழிப்பு (ஜாக்ரத), கனவு (ஸ்வப்ந), ஆழ்ந்த உறக்கம் (சுஷுப்தி) என்னும் உயிர்களின் அவத்தைகளைக் குறிப்பனவாகும். உபநிடதங்கள் காலத்தால் தொன்மையானவை; ஆதலால் ஓங்காரத்தைப் பகுத்து விளக்கும் முறையானது மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே இடம் பெற்று வரும் ஒரு மரபாகும் எனலாம்.

சைவத் திருமறையாகிய திருமந்திரம் (975) ஓங்காரத்தைப் பகுத்து, அகரம் உயிர் (பசு), உகரம் இறைவன் (பதி), மகரம் குற்றம் அல்லது தளை (பாசம்) என்பவற்றை உணர்த்தும் என்று சைவ சித்தாந்த முப்பொருளோடு தொடர்புபடுத்தி விளக்குகின்றது.

"அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மலமாய் வரும்"

படைப்பாற்றல் :

ரிக் வேதம் (8:89:10) ஓங்காரத்தைத் தேவர்களின் ராணி (ராஷ்ட்ரீ தேவாநாம்) என்று குறிப்பிடுவதன் மூலம் அதனை அனைத்து வல்லமைகளும் பொருந்திய பராசக்தியாகக் (முழு முதற் கடவுளாகக்) காட்டுகின்றது. ஓங்காரமாகிய நாதமே (வாக்கே) அனைத்துலகின் (whole universe) படைப்பிற்கும் மூல ஆதாரமாக உள்ளது என்று புனித நூற்கள் காட்டுவதற்கு ஏற்ப, இறைவனைக் கருக்கொண்டு பெண்

# நன்மை

தினக்குக் கிடைக்கும் பொருளை ஐந்து பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவை தர்மத்திற்கும், இரண்டாவது பிரிவை தன் புகழுக்கும், மூன்றாவதை பொருளை வளர்ப்பதற்கும், நான்காவதை தன் செலவுக்கும், ஐந்தாவதை தங்கள் உற்றார் உறவினர் நன்மைக்காகவும் செலவழிக்கிறவர்கள் இகத்திலும் சரி, பரத்திலும் சரி நன்மைகளைப் பெறுவர்.

— பாகவதம்.

தகவல்: வி. ஸ்ரீதர் — கோயமுத்தூர்.

மைப்படுத்திக் காட்டும் முயற்சியே 'தேவர்களின் ராணி' என்ற இவ் வருணனை ஆகும். இவ்வியல்பினைத் திருமந்திரம் (1073), 'ஓங்காரி யென்பா ளவளொரு பெண் பிள்ளை' என்று குறிப்பிடுவதில் காண்கின்றோம்.

ஓங்காரத்தைக் கடவுளின் படைப்பாற்றலாக (creative power of God) இந்தியத் தத்துவ ஞானம் காட்டுகின்றது. ஓங்காரமாகிய நாதத்திலிருந்தே அனைத்துலகும் தோன்றி, தோன்றியவாறே படிப்படியாக அதில் ஒடுங்குகின்றன. நாதத்தோடு தொடர்புடைய வெளியிலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமாகிய தாதுக்களும் தோன்றி, பின்னர் இவ்வைந்து பூதங்களின் சேர்க்கையால் பல்வேறு உருமாறுபாடுடைய உலகப் பொருட்கள் தோன்றி, அவ்வெளியிலேயே ஒடுங்குகின்றன. உலகங்களின் விரிவும் நிகழ்வும் ஒடுக்கமும் ஓங்காரத்தின் அசைவால் (சலனத்தால்) நிகழுகின்றன. அசைவின்மை ஏற்படும்போது (நிச்சலனத்தில்) முக்தி நிலை ஏற்படுகின்றது. எனவே ஓங்காரமே முக்திக்கும் வித்து எனலாம். இதனை பிருஹதாரணிய கோபநிடதமும் (1), "ஓம்; அது நிறைவுடையது. இதுவும் (universe) நிறைவுடையது. நிறைவிலிருந்து நிறைவு தோன்றியுள்ளது. நிறைவிலிருந்து நிறைவை எடுத்த போதும் நிறைவே எஞ்சி உள்ளது" என்று குறிப்பிடுகின்றது.

"ஓம் பூர்ணமதஹ் பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ணமுதச் யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ண
மேவா வசிஷ்யதே"

என்றும்,

"ஓங்காரத் துள்ளே உதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத்துள்ளே உதித்த சராசரம்"

"ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே"

(திருமந்திரம் 2677, 2676)

என்றும் குறிப்பிடுகின்றது.

இந்து சமயம் மட்டுமின்றி, சீக்கியச் சமயமும் ஓங்காரத்தைக் கடவுளோடு சார்த்தி, அது படைப்பு, காப்பு, அழிப்பு என்னும் முத்தொழில்களையும் புரிகின்ற அனைத்து வல்லமையும் உடையது என்று கூறுகின்றது. இச் சமயத்தின்படி இறைவன் வடிவம் அற்றவன். அத்தகைய இறைவனோடு இரண்டறக் கலப்பதற்கு உயிர்கள் வடிவமற்ற நிலையில் இறைவனை வழிபடுதல் வேண்டும். ஒலி வடிவமான இறைவனை ஒலியை மனத்தில் உருப்போடுவதன் மூலமும் அவன் பெயரைப் (ஒலியை) பாடுவதன் மூலமாகவும் அடைய முடியும் என்று விளக்குகின்றது. இக்கோட்பாடு 'இக் ஓங்கார்' எனத் தொடங்கும் சீக்கிய மூல மந்திரத்தில் பொதிந்து கிடக்கின்றது.

வெளிநாட்டுச் சமயங்கள் ஓம் என்ற சொல்லைக் குறிப்பிடவில்லை. ஆனால் ஒலியே உலகத் தோற்றத்திற்கு மூல ஆதாரமாக இறைவனின் படைப்பாற்றலாக இருக்கின்றது என்பதனை யூதச்சமயமும் அதன் குழந்தைகளாகிய கிறிஸ்தவமும் இஸ்லாமும் ஒப்புக் கொள்கின்றன. கிறிஸ்தவம் புதிய ஏற்பாட்டில், "ஆதியில் வார்த்தை இருந்தது; அது தேவனோடு இருந்தது; தேவனாக இருந்தது" என்று குறிப்பிடுவதையும், குமாரனாகிய இயேசுவை 'வார்த்தையானவர்' என்று குறிப்பிடுவதையும் இங்குச் சுட்டிக் காட்ட முடியும். இந்த வார்த்தை என்பது இந்தியத் தத்துவ ஞானம் குறிப்பிடும் ஓங்காரம் அல்லது நாதத்தினை ஒத்தது ஆகும்.

இந்து சமயப் புனித மந்திரங்கள் அனைத்தும் ஓம் என்ற சொல்லுடனே தொடங்குகின்றன. ஓம் நமசிவாய, ஓம் சக்தி, ஓம் நமோ நாராயணாய, ஓம் சரவணபவ என்பன போன்ற மந்திரங்கள் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டுக்களாகும். இவற்றில் ஓங்காரம் விடுபட்டபோது இவை ஆற்றலற்ற வெறுஞ்சொற்களாகி விடுகின்றன. சமண சமயத்தின் மூல மந்திரமும் 'ஓம் ணமோ' என்றே தொடங்குகின்றது.

ஓங்காரம் பிரணவத்தின் சூக்கும (நுண்ணிய) உடலாகும். எனவே இது சூக்குமப் பிரணவம் என்று சுட்டப்படுகின்றது. ஹ்ரீம் என்பது பிரணவத்தின் ஸ்தூல (பரு) உடலாகும். எனவே 'ஹ்ரீம்' ஸ்தூலப் பிரணவம் எனப்படுகின்றது.



# இரும்பும் கரும்பும்

திரு. த. நித்தியானந்தம் எம்.ஏ.பி.டி.
திருவில்லிபுத்தூர்.

ஒரு குடும்பத் தலைவனுக்கு ஐந்து குழந்தைகள். அவரது மனைவி திடுமென வந்த காலராக் கொள்ளை நோயால் மாண்டு விட்டாள். அத்தலைவனோ ஐந்து பிள்ளைகளை எப்படிக் காப்பாற்றுவது என்று தெரியாமல் திண்டாடி நொந்து கொண்டிருந்தான்.

அவனுக்கு ஓர் அண்ணன். கொழுத்த பணக்காரன்; கோடீசுவரன். ஆனால் குழந்தை குட்டி இல்லாதவன். எனினும் தன் தம்பி பிள்ளைகளைக் காக்க வேண்டும்; தன் தம்பியின் தவிப்பைத் தீர்க்க வேண்டும் என்று எண்ணவில்லை. அந்நியரைப்போல் அவனும் தம்பியிடம் துக்கம் விசாரித்து விட்டு விலகிப் போய் விட்டான்.

இரக்கம் சிறிதும் இல்லாது போன அந்த அண்ணனின் மனம் என்ன மனம்? அதுதான் இரும்பு மனம். அண்ணனிடம் பொருள் நிறைந்த இரும்புப் பெட்டி இருந்தது. என்றாலும் இரக்கமில்லாத இருதயம். இதுவே இரும்பு மனம்.

இரும்பு வன்மையானது. இரும்பு மனம் இரக்கங்காட்டாதது. இரும்பிலே துரு ஏறும். இரும்பு மனத்திலே குறைகள் நிறையும். கரும்பாலையிலே மூன்று இரும்பு உருளைகளுக்கு இடையில் கரும்புகள் செல்லும்போது கசக்கிப் பிழியப்படும். அப்போது கரும்புச்சாறு இரும்பு உருளைகளில் வடியும். எனினும் கரும்பின் ருசியை இரும்பு உருளைகள் அறியா.

அதுபோல இரும்பு மனம் படைத்தவர்கள் கரும்பாம் இறைவனின் திருவருளை உணர்வதில்லை. நாத்திகரின் நெஞ்சம் நாதப் பிரம்மத்தின் நல்லியல்பை அறிவதில்லை.

கோயில் சந்நிதானத்தில் வசித்தாலும், கோகுல மக்களின் பக்திச் சொற்பொழிவைப் பக்திப் பாசுரங்களைக் கேட்டாலும் பரம்பொருளின் திருவருள் இன்சுவையைச் சுவைப்பதில்லை. கடவுள் இருப்பதை ஏற்றுக்கொள்வதில்லை. அவர்களின் இருதயமும் இரும்பு தானே!

ஆனால் முக்கனிச் சாறுபோல் பக்திச் சுவைச் சொட்டச் சொட்டத் திருவாசகம் பாடிய மாணிக்கவாசகர் தன் மனமும் கரும்பு ருசி அறியாத இரும்பாக இருந்தது என்கிறார். தன் இயல்பைத் தாழ்த்தி, தனக்குவமை இல்லாத இறைவனை உயர்த்தி இரும்பையும் கரும்பையும் உவமையாக எடுத்துரைக்கிறார். உலகிலுள்ள பெரும்பாலான இரும்பு மனங்களின் சார்பில் மனம் விட்டுப் பேசுகிறார்.

காந்தம் இரும்பை இழுப்பது போல், கடவுள் இரும்பு மனத்தை இழுத்தார். ஒருமுறை இருமுறையல்ல, பன்முறை இழுத்தார். வலிய எலும்பினை அன்புச் சுடரால் உருக்கினார். அத்தோடு விட்டாரா? கழல் அணிந்த தன் பொற்பாதக் கால்கள் மூலமாக மகாதேவன், மாணிக்கவாசகருக்குக் கரும்பின் ருசியைக் காட்டினார்.

என்ன அற்புதம்! பொற்குவியலாம் அவரது பாட்டின் சொற்குவியலைப் பார்ப்போம்.

"இரும்புதகு மனத் தேனை
ஈர்த்து ஈர்த்து என்புருக்கிக்
கரும்புதரு சுவை, எனக்குக்
காட்டினை உன்கழல் இணைகள்"

(திருவாசகம்)

இரும்பு மனத்திற்குக் கரும்புச் சுவையைக் காட்டியவர் யார்? அலைகள் ஒருங்கே உலவும் கங்கையைச் சடையில் தரித்த சாம்பசிவம்! கரும்பின் ருசி (கடவுளின் திருவருள்) அறிய முடியாத இரும்பு மனதிற்கு, அச்சுவையை உணர வைக்கும் சக்தி, பரமசிவத்திற்குத்தான் உண்டு. வியப்பிற்குரிய செயல்களைச் செய்வதுதானே வேத விழுப்பொருளின் திருவிளையாடல்!

ஓர் எடுத்துக்காட்டு. மணிவாசகரின் வாழ்க்கையிலே ஒரு நிகழ்ச்சி. நரிகளையெல்லாம் பெருங் குதிரைகளாக மாற்றிய பெருந் திறமை — பேரருள் இறைவனுடையதாகும்.

நரி, நயவஞ்சகங் கொண்டது; நல்லாற்றல் இல்லாதது. பரி (குதிரை) வஞ்சம் அறியாதது; வலிமை மிக்கது. இறைவன் திருவருள் வஞ்சத்தை மாற்றி வலிமையை உருவாக்கியது.

முன்மொழிந்த பாட்டின் பின் பகுதியைப் பார்ப்போம் :-

"ஒருங்குதிரை உலவுசடை
உடையானே! நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவாறு
அன்றே, உன்பேர் அருளே

(திருவாசகம்)

வேத நாயகனே இத்தகைய அற்புதத்தை விளைவிப்பான். நாமோ அற்பர். இரும்பு மனங் கொண்டவர். ஆனால் நம் கடமை, பூரண நாதனுக்கு நம்மை நாம் அடிமையாக்குவது — அவரே கதி என்று சரண் அடைந்து விடுவது.

இதற்குப் பதிலாக என்ன கிடைக்கும்? எல்லாவற்றிற்கும் மேலான வல்லாள தேவனின் அன்பு கிட்டும்.

"அன்பால் நீ அகம் நெகவே
புகுந்து அருளி ஆட்கொண்டது"

— என்றும்

"தானே வந்து எனது உள்ளம்
புகுந்து அடியேற்கு அருள் செய்தான்

— என்றும்

குறிக்கப் பெறுகிறத் திருவாசகத் தேமொழிக்கேற்ப இறைவன் தானே வந்து நம் மனத்துள் புகுவான். அன்பால் நெகிழ வைப்பான்; ஆட்கொள்வான். அருள் கொடுப்பான். இதுவே பேரின்பம்!



# தமிழில் தலபுராணங்கள்

நம்நாட்டில் மிகப் பழங்காலந் தொட்டே, புராணங்களுக்குப்பெரிய அளவில் செல்வாக்கு இருந்து வந்தது. வேதம், இதிகாசம், உபநிடதம் ஆகியவற்றிற்குஅடுத்தபடியாகப் புராணங்களையே புண்ணிய நூல்களாகப் போற்றினர். வீர மேம்பாடு மிக்க நூல்களையே புராணமாக கிரேக்கர்கள் கருதினர். நம் நாட்டைப் பொறுத்த வரையில் இறைவன், சமயம் போன்றவற்றுடன் தொடர்புடைய நூல்களே புராணங்களாகக் கருதப்பட்டன. உலகின் தோற்றம், ஊழின் இறுதி, மன்னர்களின் வம்சாவளி போன்ற செய்திகள் புராணத்தில் இடம் பெற்றன.

வடமொழி நூலார் பதினெட்டு மகாபுராணங்களையும், பல உபபுராணங்களையும் சிறப்பாகக் குறிப்பிடுகின்றனர். பிரமபுராணம், பதும புராணம், வைணவ புராணம், சைவ புராணம், பாகவத புராணம், பவிஷ்ய புராணம், நாரதிய புராணம், மார்க்கண்டேய புராணம், பிரமவைவர்த்த புராணம், இலிங்க புராணம், வராக புராணம், வாமன புராணம், கூர்ம புராணம், மச்ச புராணம், காருடபுராணம், ஸ்காந்தபுராணம், பிரம்மகாண்ட புராணம், ஆக்னேய புராணம் ஆகிய பதினெட்டும் மகா புராணங்களாகும். உப புராணங்களுள் சனத்குமார புராணம், காந்த புராணம், நந்தி புராணம், நாத புராணம், மாணவ புராணம், பிரம்மாண்ட புராணம், காளிபுராணம், சாம்ப புராணம், பராசர புராணம், நரசிம்ம புராணம், சிவதருமபுராணம் துர்வாச புராணம், கபில புராணம், ஔசதச புராணம், வருண புராணம், மகேஸ்வர புராணம், கௌரபுராணம், மாரீச புராணம் (ஆதித்யபுராணம்) ஆகியன அடங்கும்.



ஸ்ரீவாஞ்சிநாதஸ்வாமி திருக்கோயில்
ஸ்ரீவாஞ்சியம்

தொன்றுதொட்டு இன்று வரை பரவியுள்ளதே புராணம் என்று வாயு புராணம் இயம்புகிறது. அரச குமாரர்கள் கற்க வேண்டிய நூல்களுள் புராணமும் ஒன்று என்று கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் செப்புகிறது. உலகத் தோற்றம், ஒடுக்கம், மனுவந்தரம், முனி மரபு, அரசமரபு ஆகிய ஐந்து பகுதிகளையும் புராணங்கள் பெற்றிருக்க வேண்டும் என அமர சிம்மம் போன்ற நிகண்டுகள் இயம்புகின்றன.

முதலில் பழங்கதைகளாகச் செவி வழியே தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்த புராணங்கள், பின்னர் நூல் வடிவில் வந்தன. புத்தர் காலத்திற்கு முன்பு ஆதி புராணமும், அவரது காலத்திற்குப் பின்பு பிற புராணங்களும் எழுந்தன. தமிழகத்தைப் பொறுத்தவரை தொல்காப்பியம், புறநானூறு, பரிபாடல் போன்ற நூல்களில் தெய்வ வழிபாடு பற்றிய குறிப்புகள் உள்ளன. தெய்வங்கள் சம்பந்தப்பட்ட நூல்கள் சங்க காலத்திலேயே எழுதப்பட்டுப் பின்னர் அழிந்திருக்கலாம். இடைச் சங்க காலத்தில் பூதபுராணம், மகா புராணம் ஆகிய நூல்கள் இருந்தன வாம். "மதிநலம் கலந்த பூதபுராணம்" எனப்படும் மேற்கோள் வரிகள் இவ்வுண்மைக்குச் சான்றாகும்.

தமிழைப் பொறுத்தவரை புராணங்களை மூன்று முக்கிய வகைகளாகப் பிரிக்கலாம்.

திரு. எம். இராஜகோபாலன்,
சென்னை.

**பெரியவர்களின் வாழ்க்கை வரலாறு :**

தெய்வீகத் தன்மை பெற்ற பெரியோர்களின் வாழ்க்கை, அவர்கள் புரிந்த அற்புதச் செயல்கள் போன்றவற்றைப் புராண மரபில் கூறுவது ஒரு வகையாகும். திருத்தொண்டர் புராணம், சேக்கிழார் புராணம், திருவாதவூரடிகள் புராணம் போன்றவற்றை உதாரணமாகக் கொள்ளலாம். முருகதாச சுவாமிகளின் புலவர் புராணமும், அசலாம்பிகையின் காந்தி புராணமும், உமறுப்புலவரின் சீறாப் புராணமும் இவ்வகையைச் சார்ந்தனவே.

**தெய்வீகப் புராணங்கள் :**

ஈசனின் அருட்செயல்களை எத்தலத்துடனும் இணைக்காமல் பொதுவாகக் கூறும் புராணங்களும் உண்டு. விநாயகபுராணம், மச்சபுராணம், கூர்ம புராணம் போன்றவை தலச் சார்பு இன்றி இறைவனின் திருவிளையாடல்களைத் தனித் தனிச் சம்பவங்கள் மூலம் விளக்கும்.



தலசயனப்பெருமாள் கோயில் — மாமல்லபுரம்

தலபுராணங்கள் :

இறைவனின் புகழை ஒரு தலத்துடன் இணைத்து, அப்பதியின் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றை வெளிப்படுத்தும் தல புராணங்களே தமிழில் அதிக அளவில் உள்ளன. காஞ்சிபுராணம், சேது புராணம், கோயிற் புராணம் போன்றவற்றை உதாரணமாகக் கொள்ளலாம்.

இவை தவிர நதி, மரம், விரதம், பண்டிகை போன்றவற்றைச் சிறப்பிக்கும் புராணங்களும் உண்டு. தாமிர பரணி மகாத்மியம், காவிரி புராணம், பினுகி எனும் பெண்ணை புராணம் போன்றவை புண்ணிய நதிகளின் பெற்றியை நவில்கின்றன. இவை தவிர பனை மரம் பற்றிய புராணம், ஏகாதசிப் புராணம், மகா சிவராத்திரிப் புராணம் போன்றவையும் உண்டு.

தலபுராணங்களின் தோற்றம் :

தமிழகத்தில் சமண சமயம் பரவிய போது புராணம் எனும் இலக்கியத்திற்குக் காவிய அந்தஸ்து கிடைத்தது. பத்தாம் நூற்றாண்டில் புராண சாகரம் என்ற நூலும், சாந்தி நாதர் எனும் தீர்த்தங்கரர் பற்றிய சாந்தி புராணமும் இருந்தனவாம். அவற்றுள் ஒரு சில பாடல்களே கிடைத்துள்ளன.

கி. பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டில் குலோத்துங்க சோழனின் கல்வெட்டுக்கள் இரண்டு புராணங்களைக் குறிப்பிடுகின்றன. மாறவர்வன் குலசேகர வர்மனின் திருப்பத்தூர்க் கல்வெட்டின் மூலம் பெரும்பற்றப் புலியூர் நம்பி என்பவர் திருவாலவுடையார் திருவிளையாடல் எனும் நூலைப் பதின்மூன்றாம் நூற்றாண்டில் இயற்றியதாக அறியலாம். அந்நூலின் சில செய்யுட்கள் மட்டுமே கிடைத்துள்ளன. பதினான்காம் நூற்றாண்டில் உமாபதி சிவாச்சாரியார் 'கோயிற் புராணம்' எனும் நூலை இயற்றினார். சிதம்பரத்தின் மகிமையை இயம்பும் இந்நூல் அளவில் சிறியதாயினும், செய்யுள் நயம், அமைப்பு போன்றவற்றால் சிறப்புடையது. தல் புராண வளர்ச்சிக்கு வித்திட்ட பெருமை இந்நூலுக்கே உரியது.

வளர்ச்சி :

கி. பி. பதினான்காம் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பகுதி வரை இலக்கியத்தையே தன் வயப்படுத்தி ஆட்சிப் பீடத்தில் இருந்த சிறப்பு தலபுராணங்களுக்கு உண்டு. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டியச் சிற்றரசரான அதிவீரராம பாண்டியன் கூர்ம புராணம்,லிங்க புராணம், கந்த புராணத்தின் ஒரு பகுதியான காசிக் காண்டம் ஆகியவற்றை வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்தார். மற்றொரு குறுநில மன்னரான வரதுங்கராம பாண்டியர் பிரம்மோத்திர காண்டத்தை மொழி பெயர்த்தார். வடமொழியின் சார்பு இல்லாமல் முழுமையாகவே தமிழில் தோன்றிய அருணகிரி புராணம், கமலாலயப் புராணம் ஆகியவற்றை மறைஞான சம்பந்தர் இயற்றினார். இவை அனைத்தும் அழகிய நடையில் அமைந்துள்ளன.

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவ எல்லப்ப நாவலர் திருவெண்காட்டுப்புராணம்,திருச்செங்காட்டுப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தீர்த்தகிரிப் புராணம், செவ்வந்திப் புராணம் ஆகியவற்றை இயற்றினார். தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த சரவணயர் கந்த புராணச் சுருக்கத்தை எழுதினார். அகோர முனிவர் வேதாரண்ய புராணம், கும்பகோணப் புராணம் ஆகியவற்றை இயற்றினர்.சிவப் பிரகாச சுவாமிகள் திருக்கூலப் புராணத்தையும், அவரது சகோதரரான கருணைப் பிரகாசர் திருக்காளத்தி புராணத்தையும் எழுதினர். அந்தகக்கவி வீரராகவர் திருக்கழுக்குன்றத் தல புராணத்தை எழுதினார். தலபுராணங்களிலேயே தலை சிறந்ததாகக் கருதப்படும் திருவிளையாடல் புராணம் பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பட்டது.

பதினெட்டாம் நூற்றாண்டில் காஞ்சி புராணத்தின் முற்பகுதியைச் சிவஞான முனிவரும், பிற்பகுதியைக் கச்சியப்பரும் படைத்தனர். திரிகூடப்பராசக் கவிராயரின் குற்றாலத் தலபுராணம் ஒரு அற்புதமான படைப்பாகும். சிதம்பர முனிவர்



விமானம்
சுந்தரவரதப்பெருமாள் திருக்கோயில்
உத்திரமேரூர்.

பாதிரிப்புலியூர்த் தல புராணத்தை இயற்றினர். பேரூர், திருவானைக் காவல், பூவாளூர், திருத்தணி ஆகிய தலங்களின் மீது கச்சியப்பர் தல புராணங்களை எழுதினர். இவர் இயற்றிய தணிகைப் புராணம் இலக்கிய அறிஞர்களுக்கு ஒரு சிறந்த விருந்தாகும். இதில் தொல்காப்பியக் கருத்துக்கள் பலவற்றை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

அதிக அளவில் தலபுராணங்களை இயற்றிய பெருமை மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களையே சாரும். அம்பர், உறையூர், கும்பகோணம், திருக்குறுக்கை, கோயிலூர் சூரைமாநகர், தணியூர், திருத்துருத்தி, திருநாகைக் காரோணம், பெருந்துறை, மயிலை, திருவரங்குளம், திருவாளொளிபுத்தூர், பட்டீஸ்வரம், பண்ணிப் படிக்கரை ஆகிய தலங்களைப் பற்றிய புராணங்களை அழகிய, இனிய நடையில் மீனுட்சி சுந்தரம் பிள்ளை இயற்றினர்.

**தலபுராணம் எழுந்ததற்கான காரணங்கள் :**

இலக்கிய வளர்ச்சியில் காலத்திற்கேற்ப மாற்றங்கள் ஏற்படுகின்றன. காப்பியக்காலத்தில் நீண்ட தொடர் நிலைச் செய்யுட்களாலான காப்பியங்கள் எழுந்தன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில் சிறிய, அழகிய பக்திப் பாடல்கள் தோன்றின. அப்பாடல்கள் காப்பிய வடிவில் அமைக்கப்பட்டுத் தலபுராணங்களாக வடிவெடுத்தன. இவ்வாறு பக்திப் பாடல்களின் வளர்ச்சியே தலபுராணங்கள் தோன்றக் காரணமாக இருந்தன.

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற முதுமொழிக்கேற்ப அனைத்து ஊர்களிலும் கோயில்கள் தோன்றின. கோயில்களை மையமாகக் கொண்டு எழுந்த கதைகள், புலவர்களின் புனைவுடன் தலபுராணங்களாக உருவெடுத்தன. அவ்வாறு எழுந்த தலபுராணங்களுக்கு விரிவுரை வழங்க 'பிரசங்கி' என்போர் இருந்தனர். சமய உணர்வு, அற்புதக் கதைகளின்மேல் மக்களுக்கு உள்ள மோகம் ஆகிய இரண்டும் தல புராண வளர்ச்சிக்கு உதவின. காப்பியங்களிலும் இவ்விரண்டு அம்சங்கள் இடம் பெற்றிருந்தன. பக்தர்களின் துன்பத்தை நீக்க இறைவன் புரிந்த அற்புதங்களை அறிந்துகொள்ள மக்கள் பெரிதும் விரும்பினர்.

சைவம், வைணவம் ஆகிய இரண்டிற்கும் ஏற்பட்ட போட்டியின் விளைவாகத் தனது கோட்பாடுகளை உயர்த்தி எழுத வேண்டும் என்ற அவா எழுந்தது. கோயில்களில் நடைபெறும் பூஜைகள், திருவிழாக்கள் ஆகியவற்றின் பெருமையை விளக்கப் புண்ணியக்கதைகள் தேவைப்பட்டன. இலக்கிய நயமும், காவியச் சுவையும் மிக்க தல புராணங்கள் எழுந்தன.

தலபுராண வளர்ச்சிக்கு அரசியல் காரணங்களும் உதவின. சோழர்கள் காலத்தில் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டது. எண்ணற்ற ஆலயங்கள் எழுந்தன; அவை அற்புதக் கலைக் கூடங்களாக மாறின. சமய உணர்ச்சியும், இலக்கிய ஈடுபாடும் இணைந்து தல வரலாறுகள் தோன்ற வழிவகுத்தன. வடமொழியிலிருந்த புராணங்களைத் தமிழ்ப் படுத்த வேண்டும் என்ற எண்ணமும் ஓங்கியது. சில நூற்றுண்டுகளுக்குப்பின் தமிழகத்தை ஆண்ட விஜயநகர, நாயக்க மன்னர்கள் பிற மொழியினராதலால் அந்நியர்களாகவே கருதப்பட்டனர்; எனவே நாட்டுப்பற்று, அரசர் மீது பற்று ஆகியன இல்லாது போயின. தனது ஊரின் சிறப்பையும், அங்கு எழுந்தருளியுள்ள ஈசனின் புகழையும் பரப்ப வேண்டும்என்ற எண்ணத்தின் பிரதிபலிப்பாக இக்காலத்தில் பல தல வரலாற்று நூல்கள் எழுந்தன. தென்னுட்டில் தருமபுரம் போன்ற இடங்களில் மடங்கள் தோன்றின. சமய, இலக்கிய வளர்ச்சியில் ஈடுபாடு கொண்ட மடாதிபதிகள் தல வரலாறு எழுத ஊக்கம் அளித்தனர்.

இவ்வாறு அறுநூற்றுக்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தமிழில் தோன்றின. வடமொழி மரபைத் தழுவி மான்மியம், வைபவம், மகாத்மியம் போன்ற பெயர்களும் அவை பெற்றிருந்தன. சில நூல்கள் செய்யுள் வடிவாகவும், வேறு சில வசன நடையிலும் தோன்றின. ஏடாக இருந்து அச்சான நூல்களும் உண்டு; அச்சாகாமல் அழிந்தனவும் உண்டு. அச்சாகி பின்னர் மறைந்த நூல்களும் உண்டு. தற்போது, காலத்திற்கேற்ப, சுருக்கமான, வசன நடைப் புராணங்கள் வெளியிடப்படுகின்றன.

**தலபுராணங்களின் அவசியம்**

போர், வறுமை, அறியாமை ஆகியவற்றில் உழன்று அல்லல் உறுவோரைத் தட்டியெழுப்பும் பெருமை தலபுராணங்களுக்கு உண்டு. மனம் வருந்தி வழிபடுவோர்களின் தவறு மன்னிக்கப்படும் என்ற நம்பிக்கையை மனிதர்களிடம் ஏற்படுத்திய பெருமை தல புராணங்களுக்கு உண்டு. தெரிந்தே தவறு செய்பவர்

(28ம் பார்க்க பக்கம்)

# சித்திரத் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. ✻ சித்திரம்: சசி.

## 11. முகில் வண்ணனே!

"திருவே உருவான பொன் கொடி போன்றவளே! எம் தோழியே! இளங்கன்றுகளுடன், அமுத மன்ன பாலைப் பொழியக் கூடிய பசுக் கூட்டங்கள் பலவற்றைக் காப்பாற்றிப் பாலினை கறந்து, வஞ்சகமே உருவான பகைவர்களின் வலிமை-ஆற்றல்-வீரம் அழிந்தொழியும்படி, அவர்கள் இருக்கும் இடங்களுக்கே சென்று,போர் புரிந்து,வெற்றி பெறுகின்றவர்களும், எந்த ஒரு குற்றமும் இல்லாத உத்தமர்களாகிய கோபாலர்களின் உயர்க் குலத்திலே தோன்றிய பொன்னே! கண்ணை ஈர்க்கும் 'பொற் கொடி' போன்றவளே! புற்றிலிருந்து வெளிவந்து ஆடும் பாம்பின் படம் போன்ற அழகிய அல்குலைப் பெற்ற எழில ணங்கே! கானகத்தில்,விரும்பிய வண்ணம் ஆடித்திரியும் பேரழ குப் பெற்ற வண்ண மயில் போன்றவளே! எழுந்து வருவாய்... செல்வச் செழிப்பிலே உருவான இன்பமே வடிவானப் பெண்மை யைப் பெற்றவளே!

உன் உறவினர்களின் தோழிமார்களுமாகிய எல்லோரும் வந்து உன்னுடைய முன் வாசலிலே குழுமியுள்ளோம்; கார் காலக் கருமேக மொத்த திரு வடிவழகு வண்ணத்தைப் பெற்ற ஸ்ரீ கண்ணபிரானின் திருநாமத்தை நாங்கள் பாடுகின்றோம்! அசையவில்லையே, உன் உடம்பு கொஞ்சமும்! பேசாமல் உள் ளதே உன் திருநாவும்! எதற்காகவோ... என்ன பயன் கருதி இப்படி உறங்குகிறாயோ நீ? நன்றாக உள்ளதோ இச்செய்கை?" என்று துயில் சாகரத்தில் மூழ்கிய தன் தோழியை எழுப்பு கிறாள் ஸ்ரீ கோதையாள்.

கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றரவ அல்குல் புனமயிலே! போதராய்!
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட
சிற்றாதே, பேசாதே, செலவப்பெண் டாட்டி நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்!

தன் தோழிமார்களையா எழுப்புகிறாள் சூடிக்கொடுத் தவள்? செல்வச் செழிப்பிலும், வளத்திலும், வனப்பிலும், அகந்தையிலும் லயித்துவிட்ட, தங்களை மறந்து மூழ்கிவிட்ட உலக உயிர்களை அவ்வுயிர்கள் உய்வு பெற வேண்டி. தான் அல்லும் பகலும-கனவிலும் நனவிலும் போற்றி தியானித்து வரும் ஸ்ரீ கண்ண பிரானின் திருவருளை பெற்றால், அவ்வுயிர்கள் உலகத் துன் பங்களில் மூழ்காது; முகில் வண்ணனின் பேரருளைப் பெற்றால், பேரின்பம் பெறலாம் என்பதையே உணர்த்து கிறாள் கோதை.

பசுக்களைப் போன்ற சாதுவான பண்புகளைப் பெற்றவர்கள் ஆயர்கள்-கோவலர்கள். பிறருக்குக் குற்றமோ, கொடுமையோ, செய்யத் தெரியாத உயர்ந்த பண்புகளால் உருவான குலத்தில் தோன்றியவளே என்றும், செல்வத்துள் செல்வ மாய் விளங்குவதால்-'பொற் கொடியே' என்றும், பேரழகு பெற்றவள் ஆதலால் 'புனமயிலே' என்றும், 'பெண்டாட்டி' என்றும் அழைக்கிறாள்.

'புன மயிலே' என்று கன்னலென அழைத்தவள், 'முகில் வண்ணன் பேர் பாடவும் உடம்பை அசைக்காமல் கிடக்கிறாயே' என்று கடுமையாகச் சாடுகிறாள். 'கண்ணன், அருள் மன்னன், முகில் வண்ணன்' என்று பாடியதும், கண்களி கூற, நுண்துளி அரும்ப,கரமது மொட்டித்து இருதயமது மலர வேண்டாமா? 'முகில் வண்ணன்' என்று பாடியும் எழவில்லையே, போகட்டும் உடம்பாவது அசைய வேண்டுமே? அது கூட அசையவில்லையே' என்று சாடுகிறாள்.

எந்த சந்தர்ப்பத்திலும் பகவானை மறக்கக் கூடாது. அவன் புகழை-அருளை-எவ்வளவு சோதனைகள் வந்தாலும் போற்றுதல் வேண்டும். அறிவு இன்மையால் மறந்து விட்டால், பலவிதத் துன்பங்களில் வீழ்ந்து களைப்பும் சலிப்பும் அனுபவிக்க வேண்டி வரும். இக்கருத்தையே திருமங்கையாழ்வார்,

" மறந்தேன் உன்னைமுன்னம் மறந்தமதி இன்மனத்தால்
இறந்தேன் எத்தனையும், அதனால் இடும்பைக் குழியில்
பிறந்தேன் எய்த்து ஒழிந்தேன் பெருமானே திருமார்பா
சிறந்தேன் நின்அடிக்கே திருவிண்ணகர் மேயவனே"

என்று விளக்குகிறார். தேசிய ஒற்றுமையை குறிப்பாக உணர்த்து கிறாள் ஸ்ரீ ஆண்டாள் இப்பாசுரத்தில்,"நாங்கள் திரளாக ஒன்று கூடி-ஸ்ரீ கண்ணனின் திருவருளை பெற இயலாது. எனவே உறங் கியது போதும்; எழுந்து வந்து எங்களுடன் கலந்து நாங்கள் பெறும் இன்பத்தை நீயும் பெறுவாயாக" என்று கனிவோடு அழைக்கிறாள் ஸ்ரீகோதை.

# 12. இலங்கைக் கோமானைச் செற்றிய இனியானே!

“திருவும் நல்லுருவமும் வளமும் நலமும் நிறைந்த நங்கையே! இளங்கன்றுகளைப் பெற்ற நலந்திகழ் எருமைகள், தன் கன்றுகளை நினைத்து, மனம் இரங்கியதால், கறப்பவர் எவருமின்றித் தம் முலைக் காம்பு வழியே, இடைவிடாமல் பால் சொரிய-அதனால் அந்த இல்லம்' முழுவதும் நனைந்து சேறாகிவிடும். அத்தகு அருமையான செல்வத்தையுடையவனின் தங்கையே!... நங்கையே! மங்கையே!... வைகறை என்று உணர்ந்து......

...ஆனை சாத்தம் கத்த, ஆய்ச்சியர் தயிர்க்கடைய, எருமைகளும் வெளியே செல்ல, நாங்களும் உன் வாசல் முன் வந்தோம். கருமை திகழ், கடுங்குளிர் வானத்திலிருந்துக் கொட்டும் பனியெல்லாம் எங்கள் தலையில் விழ, உன் தலைவாசல் முன் குழுமி, பகவானின் அரும்பெரும் ஆற்றல்களை எல்லாம் போற்றிப் புகழ்ந்து பாடுகிறோம். ‘தர்மம், நீதி’ இவற்றிலிருந்து பிறழ்ந்து, காமம் ஒன்றே பற்றிய தென் திசையிலுள்ள இலங்கைக்கு அரசனான இராவணனை, தன் கோபமாகிய தர்மாவேசத்தினால் கொன்று, தர்மத்தை நிலைநிறுத்தியவனும், தன்னை நினைப்பவர்களுக்கெல்லாம், அவர்கள் மனதிற்கு இன்பத்தை அளிப்பவனுமாகிய ஸ்ரீ ராமபிரானை நாங்கள் மனமார—வாயாரப் பாடுகிறோம். அப்படிப் பாடியதை எல்லா வீட்டுக்காரர்களும் ‘துயிலுணர்ந்த பின்பும், நீ பேசாமல், வாய் திறவாமல் இருக்கிறாயே...இது என்ன பெரிய உறக்கம்? இனியாவது எழுந்திரு” என்று சற்றுக் கடுமையான குரலில் எழுப்புகிறாள் ஸ்ரீ ஆண்டாள்.

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்!
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்?
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்!

எல்லாச் செல்வங்களின் மூலமாக ஸ்ரீ கண்ணபிரானின் திருவருளுக்குப் பாத்திரமாக இயலாது. ‘தொண்டு’ செய்வது மூலமே முடியும். அன்றாடத் துன்பச் சாகரத்தில் எடுக்கும் பெரு முயற்சியான “கைங்கர்யமே” ஸ்ரீ கண்ணனுக்குச் செய்யும் சிறந்த ‘கைங்கர்யம்’ ஆகும். ஏனெனில் கோகுல கண்ணனே, அதர்மத்தை, அநீதியை அதனால் தொடரும் பேரிழப்புகளைக் களைய, மீண்டும் அவை தலை எடுக்க ஒட்டாதவாறு அழித்தொழிக்கப் பல திருவிளையாடல்களைப் புரிந்தான் அன்றோ!

“ஸ்ரீ சீத்தாராமன் சாந்த ஸ்வரூபி! தர்மமே வடிவானவன்! பிறர் துன்பங்களைத் தனக்குற்றத் துன்பங்களாக ஏற்று பிறர் துன்பங்களைக் களைந்த திருவருட் பிரகாச வள்ளல்! அத்தகு நல்லோனை வல்லோனை மெய் மறந்து பாடுகின்றோம். மெய் மறந்து பாடியும் உன் மெய்ச் சிலிர்க்கவில்லையே” என்று சாடுகிறாள் ஸ்ரீ கோதை. எனவேதான் ‘மனதுக்கு இனியானை’ என்கிறாள். இவ்வாறு கூறியும் அவள் எழவில்லை.

அஞ்ஞானத்தின் பிடியில் சிக்கித் தவிக்கும் உயிர்களிடம் உலகின் துன்ப துக்க துயர வெள்ளம் புரள, தலையிலே பனிமாரி கொட்டி வெள்ளம் புரள, இல்லங்களிலே எருமைகள் தானே சொரியும் பால் வெள்ளம் புரள, உள்ளங்களிலே ஸ்ரீ கண்ணனின் களி காதல் வெள்ளம் புரள, வெளியிலே காரிருள் வெள்ளம் புரள, ஆனைச் சாத்தம் போன்ற புள்ளினங்களின் கீச்சு கீச்சு என்ற இனிய சப்தவெள்ளம் புரள, இவ்வகை வெள்ளங்களிலிருந்து விலகி முக்தி எனும் கரைசேர ஸ்ரீ கண்ணனின் திருவடி ‘தெப்பத்தைத் தான்’ பற்ற வேண்டும்.

இப்பாசுரத்தில் முதல் இரண்டரை அடிகளில் இவள் அண்ணனுடைய செல்வச் சிறப்பை எடுத்துக் காட்டுகிறாள். அவன் எப்போதும் கண்ணனுடன் கூடித்திரிவதால், காலந்தவறாது மாடுகளை, எருமைகளை கறப்பதில்லை. அதனால் அவை கன்றுகளை நினைத்து தானாக பாலைப் பொழிய வைத்து விடுகின்றன. அத்தகு செல்வம் பெற்றவனின் தங்கையே என்று போற்றுகிறாள். யார் தன்னையே மறந்து மனம் மொழி மெய்யால் தியானம், கைங்கர்யம் செய்கிறார்களோ, அவர்களுக்கு பகவான், முலை வழியே தானே பொழியும் ‘பால்’ போல, தானே வலிய வந்து திருவருளைப் பொழிய வைக்கிறான்.

“வற்றா முது நீரொடு மால்வரை ஏழும்
துற்றா முன்துற்றிய தொல்புக ழோனே
அற்றேன் அடியேன் உன்னையே அழைக்கின்றேன்
பெற்றேன் அருள் தந்திடு என்எந்தை பிரானே”

என்று திருமங்கையாழ்வார் அக்கருத்தையே வலியுறுத்துகிறார். எனவே, ஸ்ரீ ஆண்டாள் எடுத்து இயம்பும் வண்ணம் அஞ்ஞானத்தில்-ஆசைகளிலிருந்து விடுபட்டு-எழுந்து பகவானின் திருநாமத்தைத் தியானிப்போமாக; உலகத் துன்பங்களிலிருந்து விடுபடுவோமாக.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

களுக்குக் கிடைக்கவிருக்கும் தண்டனையை எடுத்து உரைத்து, அத்தவறுகளைச் செய்யாமல் தடுக்கும் தன்மையும் அவற்றிற்கு உண்டு. நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதை அறிந்து கொள்ள ஒரு கற்பனை உலகைப் படைத்து வழிகாட்டுகின்றன. ஒவ்வொரு ஊரையும் பொன் விளையும் பூமி, புண்ணியத் தலம் என்று கூறி நம்பிக்கையை அளிக்கின்றன. கோயிலுக்குச் செல்ல இயலாதவர்களால் மனக்கண்ணால் அவ்வாலயங்களைக் காண்பதற்குத் தலபுராணம் உதவுகின்றது. திருப்பத்தூர் புராணம் சிவபெருமானின் எழு வகைத் தாண்டவங்களையும் விளக்குகிறது.

அரசியல், வரலாற்றுச் செய்திகளைத் தலபுராணங்கள் மூலமாக அறியலாம். அரசர்கள் பற்றிய செய்தி, சமயக் குரவர்கள் வரலாறு ஆகியவற்றைத் தலபுராணங்கள் மூலம் தெரிந்து கொள்ளலாம். திருவிளையாடற்புராணம் மூலம் பாண்டிய மன்னர்களின் வரலாறும், சங்கரன் கோயில் புராணம் மூலம் ஸ்ரீமாற ஸ்ரீவல்லப பாண்டியன் பற்றிய குறிப்பையும், கோயிற்புராணம் மூலம் இரண்யவர்மன், சிம்மவர்மன் ஆகிய பல்லவ மன்னர்கள் பற்றியும் செய்திகள் அறியக் கிடைக்கின்றன. நாடு, நகரம், அரசியல் அமைப்பு, சமூக அமைப்பு, மக்களின் வாழ்க்கை முறைகள் போன்ற செய்திகள் தலபுராணங்கள் தெரிவிக்கின்றன. உயர்ந்த தத்துவக் கருத்துக்களையும், சமய உண்மைகளையும் கதைகளுக்குள் புகுத்தி எளிதில் புரியுமாறு வழங்கும் சிறப்பு தலபுராணங்களுக்கு உண்டு.

அமைப்பு :

காப்பியங்களில் ஒரு மையக் கதையைச் சுற்றிப் பல சிறு கதைகள் உள்ளன. தலபுராணம் பல துண்டுக் கதைகளின் சேர்க்கையாகவே விளங்குகிறது. தலம் அல்லது தலத்தில் எழுந்தருளியுள்ள ஈசன் பாட்டுடைத் தலைவனாக இருக்கலாம். அவை ஒரே அமைப்பையோ தன்மையையோ கொண்டன அல்ல.

தலபுராணத்தின் ஆரம்பத்தில் காப்புச் செய்யுள், கடவுள் வாழ்த்து ஆகிய இரண்டும் உண்டு. சருக்கம், படலம், அத்தியாயம் போன்ற பொதுப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும். திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம் ஆகிய பகுதிகளில் தலம் அமைந்துள்ள நாடு, அவற்றின் அமைப்பு, இயற்கைவனப்பு, தன்மை ஆகிய செய்திகள் கூறப்படும். நைமிசாரண்யச் சருக்கம் என்ற பகுதியில் நைமிசாரண்ய வனத்திலுள்ள முனிவர்களுக்குச் சூதர், தலத்தின் மேன்மைகளைக் கூறுவதாக அமைக்கப்பட்டிருக்கும். தலத்தின் புராணம், மகிமை, தலவிருட்சம், புனித தீர்த்தங்கள், மூர்த்தி விசேடம் போன்ற விவரங்களை அடுத்தடுத்த பகுதிகளில் காணலாம். இப்புராணத்தைக் கேட்டவர் பெறும் தன்மையை முடிவுரையில் கூறுவர்.

தலபுராணப் பகுதியில் ஒரு சில வரலாற்றுக் கதைகள் இடம்பெறும். இதிகாசத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சம்பவங்கள் இத்தலத்தில் நடந்ததாகக் கூறப்படும். தலத்தில் வழிபட்ட முனிவர், அரசர், விலங்கு பற்றிய, விவரங்களும் அத்தலத்தில் நடைபெற்ற உண்மைச் சம்பவங்களும் விரிவாக எடுத்துரைக்கப்படும்.

இங்ஙனம் தலபுராணங்கள் இலக்கிய, சமய உலகில் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன.

---

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின மொழிபெயாபபு

இனி-சிவபிரானைவிட உயர்த்தியை மட்டுமே விஷ்ணுவுக்குச் சொல்ல வில்லை; பின்னையோவெனில் எல்லோரைவிட உயர்த்தியையும், வால்மீகி முனிவர் குறிப்பிட்டுள்ளாரென்கிறார்-'நிச்சித்யைவம்' என்று தொடங்கும் ச்லோகத்தினால்-

ச்லோகம் 7 :

நிச்சித்யைவம் முராரேர் ஹரஸமதிகதாம் ஹேதுபிஸ் த்வப்ரகம்ப்யை:, ச்ரைஷ்ட்யம் பாதோஜயோநேரபிச முநிவரஸ் ஸூசயம்ஸ் தத்ர பங்க்யா லக்ஷ்மீகாந்தோ முகுந்தஸ் ஸகலஸமதிக: ச்ரைஷ்ட்ய ஸம்பாவநார்ஹ-ப்ரஹ்மேசாநோத்தமத்வாதிதி விசதயதி ஸ்வாசயம் பாரிசேஷ்யாத் ‖

பதவுரை :

முனிவர:=முனிவர் பெருமானாகிய வால்மீகி, ஏவம் = முற்கூறியவாறு, அப்ரகம்ப்யை: = போலியுக்திகளினால் அசைக்க முடியாத, ஹேதுபி:=முற்கூறியவையும் அத்தகைய பிறவுமான காரணங்களால், முராரே:=முராசுரனைக் கொன்ற விஷ்ணு பகவானுக்கு, ஹர ஸமதிகதாம்=ருத்திரனை விட மிகவுமுயர்த்தியை, நிச்சித்ய= நிச்சயம் செய்து, தத்ர=அந்த சந்தர்ப்பத்திலேயே, பாதோஜயோநே: அபி= திருமாலின் நாபிக்கமலத்திலிருந்து தோன்றிய பிரம தேவனை விடவும், ச்ரைஷ்ட்யம் = பரத்துவத்தை, பங்க்யா ஸூசயந்=(நேராகப்பேசாமல்) சுற்றி வளைத்துப் பேசுவதன் வாயிலாகக் குறிப்பிடுமவராய், லக்ஷ்மீ காந்த:= திருவின் மணாளனாகவேதாந்தங்களில் பிரசித்தனான, முகுந்த:= வீடளிக்கும் விஷ்ணு பகவானே, ச்ரைஷ்ட்ய ஸம்பாவநார்ஹ = (படைப்புக்கும் அழிப்புக்கும் முறையே காரணமாகையால்)உயர்ந்தவர்களென்று ஊகிக்கத்தக்க, ப்ரஹ்மா ஈசான உத்தமத்வாத்=பிரமன் சிவன் ஆகியோரைவிட உத்தமனாயிருக்கையால், பாரிசேஷ்யாத்= ஒழிபு என்னும் பிரமாணத்தினால் (=பிரமன் சிவன் ஆகிய இவர்களை யொழிந்த மற்றவர்க்கு உயர்த்தியுள்ளதாக ஊகிக்கவும் முடியாமையால்) ஸகல ஸமதிக: இதி=எல்லோரையும் விட உயர்ந்தவர் என்கிற, ஸ்வ ஆசயம்= தமது கருத்தை, விசதயதி=விளக்குகிறார். (மற்றெல்லோரையும்விட உயர்ந்தவர்களென்று ஊகித்தற்கு இடமளிக்கும் பிரமனையும் சிவனையும் விட விஷ்ணுவுக்கு உயர்த்தியைக் கூறும் முகத்தால் வால்மீகி எல்லோரைக் காட்டிலும் விஷ்ணு உயர்ந்தவர் என்னும் தமது கருத்தைத் தெளிவாக்கினார் என்றபடி.

விசேடவுரை :

விஷ்ணுவின் ஹூங்காரத்தினால் மட்டுமே சிவனுக்கு ஜடத்துவம் உண்டானதையும் தேவர்கள் விஷ்ணுவே உயர்ந்தவரென்று நிச்சயித்ததையும் சொல்லுகின்ற முனிவர் விஷ்ணுவுக்குச் சிவனைவிட உயர்த்தியைக் குறிப்பாக உணர்த்தினார்.

மேலும் 'அறிவற்றவரும் மதுவென்னும் மரக்கனையழித்தவருமான உம்மை தேவர்களுக்குள் உயர்ந்தவராக அறிகிறேன்' (பால 76-19) என்ற பரசுராமரது பேச்சின் வாயிலாக, விஷ்ணு மதுகைடபர்களை அழித்தாரென்று கூறும் பாவனையினால் பிரமனது ஆபத்தைப் போக்கியதைக் கூறிப் பிரமனைவிட விஷ்ணுவுக்கு உயர்த்தியைக் குறிப்பாக உணர்த்தினார். இங்ஙனம் சிவனையும் பிரமனையும்விட விஷ்ணுவுக்கு உயர்த்தியைக் கூறும் இம்முனிவர்க்கு, ஸகல தேவ அசுர மனுஷ்யர்களைவிட உயர்ந்தவராக எண்ணுதற்கு உரியவரான பிரமசிவர்களைக் காட்டிலும் விஷ்ணு உயர்ந்தவராகையால் அவ்விருவருக்கும் எல்லோரையும் விட உயர்த்தியைக் கூறுதல் பொருந்தாமையால்,கடைசியாக விஷ்ணுவே எல்லோரையும் விட உயர்ந்தவரென்பது கருத்தாகும். இவ்விஷயத்தை மனத்தில் வைத்தே, அவ்விருவரைக் காட்டிலும் விஷ்ணுவுக்குப் பரத்துவத்தைச் சுற்றி வளைத்துப் பேசிக் குறிப்பிட்டாரென்பது இங்குக் கருதத்தக்கது.

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

'தத்ராதௌ பாலகாண்டே' என்ற இரண்டாவது ச்லோகந் தொடங்கி 'நிச்சித்யைவம் முராரே:' என்ற ஏழாவது ச்லோக மீறாகவுள்ள நூற்பகுதியினால் விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்துவத்தை நிலைநாட்டுமவையாக பாலகாண்டத்திலுள்ள காரணங்களைத் தொகுத்துக் கூறி, இனிமேல் அயோத்தியாகாண்டத்திலுள்ள காரணங்களை 'ச்ருத்வா' (8) என்று ஆரம்பித்து, 'இத்தம் லோகே' (11) என்ற ச்லோகம் முடிவாகத் தொகுத்துக் கூறுகிறார்.

ச்லோகம் 8 :

ச்ருத்வா ராமாபிஷேகம் ச்ரியமபிலஷிதாம் ப்ரார்த்தயந்தீ ஸூதஸ்ய, ப்ராணாயாமேந தத்யௌ ஸஹ நியம

## திருமண
## நன்றி அறிவிப்பு

தமிழ் ஸப்தகிரியை அதிக எண்ணிக் கையில் விற்பனைச்செய்து தொடர்ந்து வருடந்தோறும் வெள்ளிப்பதக்கம் பரிசு பெறும் பெருங்களத்தூர் ஸ்டாண்டர்டு மோட்டார்ஸ் தொழிற்சாலையில் பணிபுரியும், சென்னை நகர "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதி

ஸ்ரீ. A. V. திருவேங்கடாச்சாரி குமாரன் சிரஞ்சீவி

**A. T. கிருஷ்ணனுக்கும்**

ஸ்ரீ. V. K. சந்தான கோபால ஐயங் காரின் குமாரத்தி சௌபாக்யவதி

**கல்யாணிக்கும்**

24—5—1987 ஞாயிறு அன்று சென்னை மயிலாப்பூரில் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது. திரு மணத்திற்கு நேரில் வந்தவர்களுக்கும் அன்பளிப்பும், வாழ்த்துச் செய்தி களும் அனுப்பிய உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் எங்களது உள்ளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**"ஸ்ரீ ஆனந்தவல்லி நிலையம்"**

3. புஜங்கராவ் தெரு,
ராதா நகர்,
குரோம்பேட்டை,
சென்னை - 600044.

பரை: பூருஷம் ராமமாதா | இத்தம் ஸ்பஷ்டம் ப்ருவாண: ப்ரகடயதி முநி: ஸ்ரீபதிம் காரணத்வ-வ்யாப்த த்யேயத்வயோகாதபி கில பரமம் ப்ர ஹ்ம காண்டே த்விதீயே ||

பதவுரை :

ராமமாதா = இராமனது தாயான கௌஸல்யை, ராம அபிஷேகம்= நடக்கவிருக்கும் இராமனது யுவராஜ பட்டாபிஷேகத்தை, ச்ருத்வா= கேட்டு, ஸுதஸ்ய=தன் மகனுகிய இராம சந்திரனுக்கு, அபிலஷிதாம் ச்ரியம்=இஷ்டமான செல்வத்தை, ப்ரார்த்தயந்தீ = யாசிக்கின்ற வளாய்க் கொண்டு, ப்ராணுயாமேந= ப்ராணுயாமத்தோடும் (=மூச்சைய டக்குதலோடும்) நியமபரை: ஸஹ= உயர்ந்த நியமங்களோடும் கூட, பூரு ஷம்=புருஷ சப்தத்திறைல் சொல்லப் படுகின்ற அந்தர்யாமியான நாரா யண பகவானை, தத்யௌ=தியானம் செய்தாள். இத்தம் = என்று இவ் வாறுக, ஸ்பஷ்டம் ப்ருவாண: முநி:= தெளிவாகச் சொல்லுகிற வால்மீகி முனிவர், ஸ்ரீபதிம்= திருமகள் கேள் வனை நாராயணனை, காரணத்வ வ்யாப்த த்யேயத்வயோகாத்=உலகத் திற்குக் காரணமாயிருத்தலென்பதை விட்டுப் பிரியாத த்யேயத்வத்தின் (=த்யானம் செய்யத் தகுதி பெற் றமை யென்னும் தன்மையின்) ஸம் பந்தத்திறைல், பரமம்=எல்லாவற்றை யும்விட உயர்ந்த, ப்ரஹ்ம=ப்ரஹ்ம மாக=தானும் பெரிதாய்த் தன்னைப் பற்றினார்க்கும் பெருமையை யளித்த லென்று—ப்ரஹ்ம சப்தத்தின் பொரு ளாவதற்குக் காரணமாகக் குறிக்கப் படுகின்ற தன்மையோடு கூடியதாக, த்விதீயே காண்டே அபி=இரண்டாவ தான அயோத்தியாகாண்டத்திலும், ப்ரகடயதி கில= வெளிப்படுத்துகிறு ரன்றோ?

விசேடவுரை :

ஸ்ரீராமாயணம் அயோத்தியாகாண் டம் நான்காவது ஸர்க்கத்தில் 'இராம பிரான் தாயின் அந்தப் புரத்தில் தேவ பூஜையறையில், பட்டாடை யணிந்து மௌனமாய் இஷ்ட தேவ தையினிடம் மனம் செலுத்தித் தனக் காகச் செல்வத்தை வேண்டிக் கொண் டிருக்கிற தன் தாயாகிய கௌஸல்யா தேவியைக் கண்டான். அதற்கு முன் பாகவே ஸுமித்ரையும் லக்ஷ்மணனும் அங்கு வந்திருந்தனர். ஸீதையும் அங்கு அழைத்து வரப்பட்டாள். அப் போது கோசலை தன்மைந்தனுக்கு மறுநாள் புஷ்யநக்ஷத்திரத்தில் யுவ ராஜ பட்டாபிஷேகம் நடக்கப்போவ தைக் கேட்டு, ஸுமித்ரை ஸீதை லக்ஷ்மணன் ஆகியோர் அருகிலிருந்து பணிவிடை செய்யப் பெற்றவளாய்ப் பிராணுயாமம் செய்து (மூச்சை யடக்கி) ஜநார்த்தனனும் பரம புரு ஷனுமான நாராயணனைத் தியானம் செய்து கொண்டிருந்தாள்' (30-33) என்று மறுநாள் புஷ்யநக்ஷத்திரத்தில் இராமனுக்கு இளவரச பட்டாபி ஷேகம் நடக்கப் போகிற விஷயத் தைத் தெரிந்து கொண்ட கௌஸல்யை தன் மகனுக்காகச் செல் வத்தை வேண்டித் தேவ பூஜையறை யில் பட்டுப் புடவையுடுத்து மௌன மாயிருத்தல் முதலிய நியமங்களோடு கூடிப் பிராணுயாமம் செய்து புருஷ சப்தத்தின் பொருளான தேவதை யைத் தியானம் செய்து கொண்டு கண்ணை மூடியபடியே இருந்தா ளென்று கூறப்பட்டுள்ளது.

இங்குக் கோசலையினுல் தியானிக் கப்பட்டவன் புருஷ சப்தத்தினுல் கூறப்பட்ட நாராயணனே யாவான்; 'அவன் எதனுல் இவ்வெல்லாப் பொருள்களுக்கும் முந்தியவனுகவும் எல்லாப் பாவங்களையும் கொளுத்தும வனுகவும் உள்ளானே அதனுல் புரு ஷனுகிருன்'(?) என்ற வேத நிர்வசனத் தாலும், 'பூ: (புர்) எனப்பட்ட இந்த சரீரத்தில் சயனிப்பதனுலே ஹரி யானவர் புருஷனுகிருர். 'புரு - ச:' என்ன வேண்டியவிடத்தில் புருஷ: என்று - சகாரத்தின் ஸ்தானத்தில் ஷகாரமாக மாற்றிச் சொல்லப்படு கிறது. அல்லது புரமாகிற சரீரத்

தில் இருப்பதனுல் ஹரி புருஷனு கிறுர். அல்லது புரத்தில் வசிப்பதனுல் ஹரி புருஷனென்று கூறப்படுகிறுர். அல்லது 'முன்னமே இங்கு நான் இருந் தேன்' என்று (கூர்ம பகவான்) கூறி யதனுல் அப்பெருமானைப் புருஷ னென்று பெரியோர் கருதுகின்றனர்' என்றிது முதலான ஸ்ம்ருதி (பாத்ம) நிர்வசனங்களாலும் புருஷ சப்தம் காரணப் பெயராகவும் இடுகுறிப் பெயராகவும்இருந்து நாராயணனையே கூறுவதனுல் என்க. (நிர்வசனமா வது - ஒரு சொல்லைப் பலவுறுப்புக் களாகப் பிரித்துப் பொருள் கூறும் வகை.) அத்தகைய இந்தப் புருஷ சப்தத்திற்குப் பொருளாமவனும் விஷ்ணுவுமான நாராயணன் தியா னிக்கத் தக்கவனுக இங்குக் கூறப்பட் டான். தியானிக்கத் தக்க தன்மை யோவெனில் - 'காரணமான வஸ் துவே தியானிக்கப்பட வேண்டும்' (2-17) என்று அதர்வ சிகோபநிஷத் தில் ஜகத்திற்குக் காரணமான பொருளையே தியானிக்க வேண்டு மென்று கட்டளை செய்யப்பட்டுள்ள தனுல் உலகிற்குக் காரணமாக இருக் கும் பொருளில் மட்டுமே இருப்ப தொரு தன்மையாகும்.

உலகிற்குக் காரணமாயிருக்கும் தன்மையோவென்றுல் 'எதிலிருந்து இந்தப் பிராணிகள் உண்டாகின் றனவோ, (உள்ளே உயிராக நின்ற) எதனுல், உண்டானவை உயிருடன் வாழ்கின்றனவோ, வாழ்கின்றவை உடலை விட்டுப் பிரியும் போது அல் லது அழியும்போது எதனில் ஒன்று பட்டு லயமடைகின்றனவோ—மறை கின்றனவோ, அதுவே ப்ரஹ்மமென்று அறியக் கடவாய்' (தைத்தி-ப்ருகு-1) என்ற ச்ருதியினுல் ப்ரஹ்மத்தின் லக்ஷணமாக (அடையாளமாக) அறி யப்பட்டது. ப்ரஹ்ம ஸூத்ரம் பணித்த வ்யாஸ பகவானும் 'ஜந்மாதி அஸ்ய யத:' (1-1-2) இவ்வுலகிற்குப் பிறப்பு முதலியவை எதனுல் உண்டா கின்றனவோ அது ப்ரஹ்மம் - என்ற ஸூத்ரத்தில் உலகின் உத்பத்தி முத லானவற்றிற்குக் காரணமாக இருத் தலை ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் குறித்தருளினர். ஆக ப்ரஹ்ம லக்ஷண மான ஜகத் காரணத்வத்தை விட்டுப் பிரியாத - தியானிக்கத்தக்க தன்மை யானது இங்குச் சொல்லப்படுமள வில், அத்தகைய தியானிக்கத் தக்க தன்மையை விட்டுப் பிரியாத ஜகத் காரணத்வத்தைக் கொண்டு விஷ்ணுவே பரப்பிரம்மமென்று வால் மீகி முனிவரால் சாதிக்கப்பட்டது என்றதாயிற்று.

இனி-'தருமமறிந்த பெரியோர் களின் அநுஷ்டாநம் நமக்கு அத் தாட்சி, வேதங்களும் அத்தகையன' (ஆபஸ்தம்பதர்ம ஸூத்ரம்-1) என் றும், 'வேதம் முழுவதும் தருமத்தைப் பற்றிய உண்மையறிவைப் புகட்டும் சான்றுகும், அவற்றையறிந்தவர்கள் இயற்றிய தரும சாஸ்திரங்களும் அவர்களின் நற்பண்புகளும் நல்லோர் களின் அனுஷ்டானங்களும் (சாஸ் திரங்களில் இப்படியும் செய்யலாம், அப்படியும் செய்யலாமென்று விகற்ப மாக (உறழ்ச்சியாக) விதிக்கப்பட்ட விடங்களில் ஏதாவதொன்றைக் கடைப் பிடிப்பதற்கு) அனுஷ்டிக் கின்ற தனது த்ருப்தியும் அத்தாட்சி யாகும்' (மனுஸ்ம்ருதி-2-6) என்றும், 'வேதமும் தரும சாஸ்திரமும் ஸத்துக் களின் ஆசாரமும் தனது இஷ்டமும் தருமத்திற்குச் சான்றுகளாகும்' (யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி) என்றும் இத் தகைய ப்ரமாணங்களில் கூறப்பட்ட தரும மறிந்தவர்களின் அனுஷ்டான மாகிய அத்தாட்சியைக் கொண்டு விஷ்ணுவுக்குப் பரத்துவத்தைப் பேசப் புகுந்து, தருமமறிந்தவர்களுக் குள் சிரோமணியான (அவர்களால் தலையில் வைத்துக் கொண்டாடத் தக்க) ஸ்ரீராமசந்த்ரனுடைய ஒரு வகையனுஷ்டானத்தைக் கூறுகிறுர் 'ராம: ஸ்ரீமாந்' என்று தொடங் கும் ச்லோகத்தினுல்.

ச்லோகம் 9 :

ராம: ஸ்ரீமாந் மஹிஷ்யாஸஹ ஜநகபுவா பாவிநி ச்வோऽபிஷேகே, பக்த்யா நாராயணம் தம் விதிவதுப ஜகாமாத்மந: ச்ரேய இச்சந் | அக்நா வாஜ்யம் ஜுஹாவ ஜ்வலதி ச மஹதே தைவதாயாத சிச்யே, தம் த்யாயந் நாலயேऽஸ்யேத்யபிததத்வதத் ஸர்வ ஸேவ்யம் முராரிம் ||

பதவுரை :

ஸ்ரீமாந் ராம: = திருவாளனுன இராமன், மஹிஷ்யா ஜநகபுவா= மனைவியாம் ஜநகர் மகளோடு, அபி ஷேகே ச்வ: பாவிநி ஸதி=பட்டாபி ஷேகம் நாளை நடைபெற விருக்கை யில், தம் நாராயணம்=வேதாந்தங் களில் பிரசித்தனுன நாராயணனை, ஆத்மந: ச்ரேய: இச்சந்=தன்து நன் மையை விரும்பியவனுய், விதிவத்= முறைப்படி, பக்த்யா=அன்போடு, உபஜகாம=வழிபட்டான். மஹதே தைவதாய='நான் இந்தப் பெரிய புருஷனை அறிகிறேன்' (புருஷ ஸூக் தம் - 16) என்று பிரசித்தனுன நாரா யணனைக் குறித்து, ஜ்வலதி அக்நௌ= கொழுந்து விட்டெரிகிற நெருப்பில், ஆஜ்யம் ஜுஹாவ = நெய்யை ஹோமம் செய்தான். அத=பின்பு, அஸ்ய ஆலயே=இந்நாராயணனு டைய கோவிலில், தம் த்யாயந்=அப் பெருமானையே தியானம் செய்து கொண்டு, சிச்யே=படுத்தான், இதி= என்றிவ்வாறுக, அபிதத் (முநி:)= சொல்லுகின்ற வால்மீகி முனிவர், முராரிம்=முராசுரனையழித்த விஷ்ணு வையே, ஸர்வ ஸேவ்யம்=அனைவரா லும் வணங்கத் தக்கவராக, அவதத் = கூறினர்.

விசேடவுரை :

ஸ்ரீராமாயணம் அயோத்தியாகாண் டம் ஆறும் ஸர்க்கத்தில் - பகவான் இராமசந்திரன் மறுநாள் புஷ்ய நக்ஷத் திரத்தில் தனக்கு யுவராஜ பட்டாபி ஷேகம் செய்ய அரசன் விரும்பியிருப் பதை அறிந்து, அவ்வரசனுல் அனுப்பப் பெற்ற குல புரோகிதரான வசிஷ்டர் வந்து பட்டாபிஷேகத் திற்குப் பூர்வாங்கமாக அனுஷ்டிக்க வேண்டிய உபவாஸம் முதலிய பல

சடங்குகளை முறைப்படியே செய் வித்துவிட்டுச் சென்ற பின்பு, தனது நன்மையை விரும்பி, வேறொரு தேவ தையையும் பொருட்படுத்தாமல் நாராயண பகவானையே முறைப்படி வழிபட்டானென்பது 'புரோகிதர் சென்ற பிறகு இராமன் நீராடி மனத்தையடக்கியவனாய், தடங்கண் ணியான தன் மனைவி சீதையுடன் நாராயணனை வழிபட்டான்' (1) என் றிது தொடங்கிய நூற்பகுதியினால் கூறப்பட்டுள்ளது.

'தடங்கண்ணியான தன் மனைவி யுடன் நாராயணனை வழிபட்டான்' (1) என்றும், 'வாக்கையும் மனத்தை யும் அடக்கி வைதேஹியுடன் அப் பெருமானுடைய கோவிலில் சயனித் தான்' (4) என்றுமுள்ள இரண்டு வச னங்களின் பொருளைக் கருதி 'மஹி ஷ்யா ஸஹ ஜநகப்வா' (ஜநகர் மக ளான தன் மனைவியோடு) என்று இந்த ஒன்பதாம் ச்லோகத்தில் கூறப் பட்டது.

'இன்று புநர்வஸு நக்ஷத்திரம். இன்று தோன்றிய சந்திரன் நாளை புஷ்ய நக்ஷத்திரத்தோடு சேரும் சேர்த்தியைப் பட்டாபிஷேகத்திற்கு உரிய ஸமயமாக க்ரஹஸஞ்சார மறிந்த சோதிடர்கள் கூறுகின்றனர். ஆகையால் நாளைக்குப் பட்டாபி ஷேகம் செய்து கொள். என் மனம் என்னை விரையவே செய்கின்றது. பகைவரைத் தபிக்கச் செய்யுமவனே நாளை உன்னை இளவரச பட்டத்தில் அபிஷேகம் செய்கிறேன்' (4-21, 22) என்று தசரதன் இராமனிடம் கூறி யதையும், 'அம்மா மக்களைக் காக்கும் பணியில் நான் தமப்பனாரால் ஏவப் பெற்றிருக்கிறேன். அவர் கட்டளைப் படி எனக்குப் பட்டாபிஷேகம் நாளை நடைபெறும்'(4-35) என்று கௌஸல் யையிடம் இராமன் கூறியதையும், 'தசரத மன்னவன் நாளை நடைபெற விருக்கும் பட்டாபிஷேகத்தைப் பற்றி இராமனுக்குக் கட்டளையிட்டுப் புரோ ஹிதரான வசிஷ்ட முனிவரை அழைத்து இங்ஙனம் கூறினான்' (5-1) என்ற வாக்கியத்தையும், 'உன் தகப் பனான தயரதன் நாளைக் காலையில் உனக்கு-யயாதி நஹுஷனுக்குச் செய் ததுபோல் இளவரச பட்டாபிஷேகம் செய்யப் போகிறான்' (5-10) என்று வசிஷ்டர் இராமனைக் குறித்துக் கூறி யதையும் கருதி 'ச்வ: பாவிநி அபி ஷேகே' (—நாளை நடக்கவிருக்கும் பட்டாபிஷேகத்தில்) என்று கூறப் பட்டது.

'நாராயணம் உபாகமத்' நாரா யணனை வழிபட்டான்' (6-1) என்ற விடத்திலுள்ள நாராயண சப்தத் தையும், உபாகமத் என்றதையும், அவையே இவையென்று நினைவு படுத்துகைக்காக 'நாராயணம் உப ஜகாம' என்று கூறப்பட்டது.

'புரோஹிதர் சென்ற பிறகு இராமன் நீராடி மனத்தையடக்கி' (6-1) என்றவிடத்தில் கூறப்பட்ட மனத்தை யடக்குதலை நினைத்து (மன வடக்கமாவது வேறிடத்தில் மனத் தைச் செலுத்தாமல் நாராயண னிடமே செலுத்தி பக்தி செய்தலே யாதலால்) 'பக்த்யா' என்றும், 'ஹவிஸ் (ஹோமம் செய்யப்படும் நெய்) வைத்திருக்கும் தொன்னையை விதிப்படி (முறைப்படி) மேற்புறத் தில் பிடித்துக் கொண்டு (6-2) என்ற விடத்தில் விதிவத் என்றதனை நினைத்து 'விதிவத்' என்றும், 'ஜ்வலிக் கின்ற நெருப்பில் மஹத்தான தேவ தையைக் குறித்து நெய்யை ஹோமம் செய்தான்' (6-2) என்றதை நினைத்து 'மஹதே தைவதாய' என்றும், 'ஹோமம் செய்து மிச்சப்பட்ட அந் நெய்யைத் தனது நன்மையை விரும்பி (பிரசாதமாக) உட்கொண்டு' (6-3) என்றதை நினைத்து 'ஆத்மந: ச்ரேய: இச்சந்' (தன் நன்மையை விரும்பி யவனாய்) என்றும், 'தசரத மன்னனது மகன் விஷ்ணுவின் உயர்ந்த ஆலயத் தில் படுத்தான்' (6-4) என்றதை நினைத்து 'அஸ்ய ஆலயே சிச்யே' (இப் பெருமானுடைய ஆலயத்தில் படுத் தான்) என்றும், 'நன்றாகப் பரப்பப் பட்ட தருப்பைப் புற்பாயில் இருந்து நாராயணப் பெருமானைத் தியானம் செய்து கொண்டிருந்தான்' (6-3) என்றதை நினைத்து 'தம் த்யாயந்' என்றும் இந்த ஒன்பதாம் ச்லோகத் தில் கூறப்பட்டது.

இங்ஙனம் நாராயணனை வழிபட்ட தும் தியானித்ததும் அவனைக் குறித்து நெய்யால் ஹோமஞ் செய்ததும் - 'மதுசூதனனைத் துதித்தான், தலையால் அவனை வணங்கினான் (6-7) என்ற விடத்தில் கூறப்பட்ட துதி-வணக்கங் களையும் தழுவி நிற்கிறது.

ஆதலால் இவ்வாறு தருமத்தை நிலைநாட்ட அவதாரம் செய்தவனும் தருமமறிந்தவர்களில் தலையானவனு மான இராமசந்திரன் தன் நன்மையை விரும்பி நாராயணனையே வழிபட்ட தனால், பிறராலும் அவனே வழிபடப் பட வேணுமென்று தேறியதாகின் றது. தருமமறிந்தவரில் சிறந்தவனான இராமனால் நாராயணனே பரம்பொரு ளென்றறிந்து அர்ச்சிக்கப்பட்டபடி யினால் தருமமறிந்த பெரியோர்களில் அனுஷ்டானமென்னும் பிரமாணத் தினாலும் (அத்தாட்சியாலும்) நாரா யணனே பரம்பொருளென்று நிச்ச யிக்கப்பட்டதாகிறது.

ஆக - நம் போல்வாருக்கு தரும மறிந்தவர்களின் அனுஷ்டானமே அத் தாட்சியென்று கூறியபடியால் விஷ்ணுவே எல்லோராலும் ஸேவிக் கத் தக்கவரென்பது இப்பிரமாணத் தால் அறிவிக்கப்பட்டதாகிறதென்று கருத்து.

(தொடரும்)



(16-ம் பக்கத் தொடர்ச்சி)

கிறதா? வேறு தேகத்திலா? அவன் நல்வினைப் பயனையோ, தீவினைப் பயனையோ எவ்விடத்தில் இருந்து கொண்டு அனுபவிக்கிறான்? அனைத்தையும் விரிவாகக் கூற வேண்டுகிறேன்.'' என்று தர்ம புத்திரர் விண்ணப்பித்தார்.

மார்கண்டேயர், ''தர்மங்களை அறிந்த தர்ம புத்திரா! உலகத்திலுள்ளோர் தெரிந்து கொண்டு உஜ்ஜீவிப்பதற்காக நீ என்னை இவ்விதம் கேட்டிருக்கிறாய். இதற்கு ஸமாதானம் கூறுகிறேன். கேள்.''(மனிதன் இம்மையிலும் மறுமையிலும் ஸுக துக்கங்களை அனுபவிக்கும் முறை):

''குந்தீ நந்தன! இங்கு இறந்த பிறகு ஜீவன் லோகாந்தரம் செல்லுகையில் இவ்வுலகத்தில் செய்த தன்னுடைய வினைகளால் கதி ஏற்படுகிறது. ஈஸ்வரனால் படைக்கப்பட்ட சரீரத்தைக் கொண்டு புண்ய பாபங்களை நிறையச் செய்கிறான். வாழ்நாளின் முடிவில் பெரும்பாலும் க்ஷீணித்திருக்கிற இந்த சரீரத்தை விட்டு வேறு ஜன்மத்தை அடைகிறான். இடையில் சரீரம் இல்லாமை என்பதில்லை. ஒருவன் செய்த புண்ய பாபரூப கர்மாவானது அவனுடைய வேறு சரீரத்தில் எப்பொழுதும் நிழல் போலத் தொடர்ந்து கொண்டு பலனைக் கொடுக்கிறது. அதனால் ஸுகத்தை அனுபவிப்பதற்கோ, துக்கத்தை அனுபவிப்பதற்கோ தகுதியுள்ளவனாகிறான். அந்த ஜீவன் ஞான திருஷ்டி உடையவர்களாலோ, நல்ல அடையாளங்களாலோ, கெட்ட அடையாளங்களாலோ யமன் ஸுக துக்கங்களை அனுபவிக்கும்படி கட்டளையிடுகிறான். தன்னை அடையும் ஸுகத்தையோ துக்கத்தையோ விலக்குவதற்கு அவனுக்குச் சக்தி கிடையாது: இது அஞ்ஞானிகளின் நிலை.

ஞானிகளுடைய உத்தம கதியைச் சொல்கிறேன் கேள். ஞானிகள் கடுந்தவம் செய்கிறவர்கள்; சாஸ்திரங்களில் பற்றுள்ளவர்கள்; உறுதியான விரத நியமங்களை உடையவர்கள்; ஸத்தியத்தைப் பிரதானமாகக் கொண்டவர்கள்; ஆசார்யர்களுக்குப் பணிவிடை செய்வதில் பற்றுள்ளவர்கள்; நல்லொழுக்கமுடையவர்கள்; யோகம் செய்பவர்கள்; பொறுமையுள்ளவர்கள்; இந்திரியங்களை அடக்கியவர்கள்; நல்ல தேஜஸ்ஸுள்ளவர்கள்; சுத்தமான பிறப்பை அடைந்தவர்கள்; நல்ல லக்ஷணங்களையுடையவர்கள்; ஆசையில்லாதவர்கள்; துக்கமும் பயமும் அற்றவர்கள்; துன்பமற்றவர்கள். ஞானக்கண்ணுடையவர்கள். தம்முடைய் ஆத்மாவும், பிறருடைய ஆத்மாவும் சரீரத்தினின்று கிளம்புவதையும், வேறு கர்ப்பத்தில்

## ஊஞ்சல் விழாவின் தத்துவம்

மனிதர்களுக்கு ஒரு வருடமானது தேவர்களுக்கு ஒரு நாளாகும்; அதில் நமக்கு வருடத்தில் மார்கழி மாதமானது தேவருலகுக்கு விடியற்காலையாகும். ஆகவேதான் மார்கழி மாதத்தில் திருமாலுக்குகந்த 'வைகுண்ட ஏகாதசி' உற்சவம். பகல்பத்து இராப்பத்து என்று முன்னும் பின்னும் இருபது தினங்களும், பரமேஸ்வரனுக்குத் திருவெம்பாவை உற்சவமும் நிகழ்கின்றன. மார்கழி மாதத்தில் திருவாதிரை இறுதியாக ஸ்ரீ நடராஜப்பெருமானுக்கு ஆருத்திரா தரிசன உற்சவம் மிகப் பிரசித்தியாகும். இறைவனையும் நாயகியையும் சில ஆலயங்களில் ஊஞ்சலில் எழுந்தருளச் செய்து விழாக் கொண்டாடுகிறார்கள். இதிலும் ஓர் அரிய தத்துவமிருக்கிறது.

விந்து என்ற சத்தி ஊஞ்சலின் உச்சி வளையமாகும். அதிலிருந்து தொங்கும் நான்கு சங்கிலிகள் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம். ஊஞ்சல் பலகையைப் பிணிக்கும் நான்கு வளையங்கள்தான் இச்சை, கிரியை, ஞானம், குண்டலினி சக்திகள்! தத்துவம் முப்பத்தாறு வகைப்படும். 'அதனுள் சுத்த' வித்தியாத்தத்துவமே ஊஞ்சல் பலகையாகும். அறுமுப்பத்தொன்றாவது தத்துவத்துக்கு அப்பாலுள்ளது பிநாகம் எனும் சிவதனுசு பீடமாகும்! ஹம்ஸ மந்திரம் துணைப் பீடமாகும்!

குண்டலியினின்று ஹம்ஸநாதம் போன்ற பிரசாதத்தை எழுப்பி, முறையே அகார, உகார, மகாரமாக மும்மூர்த்திகளை ஷோடசகலாப பிரசாத முறையினால் கடந்து, விந்து நாதங்களையும் நினைத்து, இச்சை, ஞான, கிரியையான மூன்று சக்திகளுடன் சோமாஸ்கந்தராகி சிவபிரானிடம் ஊஞ்சல் போல எங்கும் அசைந்து கொண்டிருக்கிற மனத்தை நிலைபெறும்படி தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம் என்னும் சங்கிலிகளில் பிணைத்து சிவோக பாவனை செய்தலையே ஊஞ்சல் திரு விழா உணர்த்துகின்றது என்பதனை அஜிதாகமத்தின் மூலம் அறிய வருகின்றோம்!

(ஸ்ரீ தருமை ஆதீனம் மகாசந்நிதானம் அவர்களின் சொற்பொழிவிலிருந்து).

'மயூரப்ரியா' — சென்னை-91.

வசிப்பதையும், பிறப்பதையும் முழுமையாக அறிகிருர்கள். சாஸ்திரங்களை நேரில் கண்ட மகாத்மாக்களான அப்படிப்பட்ட மகரிஷிகள் ஞானத்திஞல் நல்ல கர்மாக்களைச் செய்து மறுபடியும் ஸத் கதியை அடைகிருர்கள்.

மனிதர்கள் தெய்வத்திஞல் சில வற்றை அனுபவிக்கிருர்கள். மூடர், பித்தர், ஜடபரதர் முதலியவர்கள் வந்ததை அனுபவித்தது தெய்வத்திஞல்.

சிலர் ஹடாத்காரத்திஞல் சில வற்றை அனுபவிக்கிருர்கள். யோக ஸித்தி பெற்ற விசுவாமித்திரர் முதலியவர்கள் வலிந்து அடைந்தது ஹடத்தால்.

சிலர் தம் செய்கைகளால் சில வற்றை அடைகிருர்கள். மற்ற மனிதர்கள் அனுபவிப்பது தம் வினைப் பயஞல்.

ஒருவனுக்கு இந்த உலகத்தில் மட்டும் ஸுகம் உண்டாகிறது; பரலோகத்தில் ஸுகமில்லை. மற்ருெருவனுக்கு இந்த உலகத்தில் ஸுகம் இருப்பதில்லை. பரலோகத்தில் ஸுகம் உண்டாகிறது. இன்னெருவன் இரண்டு உலகங்களிலும் ஸுகத்தை அனுபவிக்கிருன். வேருெருவன் இகலோகத்திலும் பரலோகத்திலும் ஸுகத்தை அனுபவிப்பதே கிடையாது.

எவருக்கு ஏராளமான செல்வம் இருக்கிறதோ, எவர் நன்கு அலங்கரிக்கப்பட்ட சரீரத்துடன் எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கிருனே, எப்பொழுதும் கிராம்ய ஸுகத்திலேயே பற்றுள்ள அந்த மனிதர்க்கு இந்த லோகத்தில் தான் ஸுகம் உண்டு; பரலோகத்தில் ஸுகமில்லை.

எவர்கள் யோகம் செய்பவர்களாய், தவத்தில் பற்றுள்ளவர்களாய், இந்திரியங்களை அடக்கியும் வேதங்களை ஓதியும், பிராணிகளுக்கு நன்மை செய்வதிலேயே எண்ணமுடையவர்களாய் இருந்து கொண்டு உபவாஸாதிகளால் தங்கள் சரீரங்களை ஜீர்ணமாகச் செய்கிருர்களோ அவர்களுக்குப் பரலோக ஸுகமே உண்டு. இந்த உலக ஸுகத்தை அவர்கள் அனுபவிப்பதில்லை.

எவர்கள் தர்மத்தையே பிரதானமாக அனுஷ்டிக்கிருர்களோ அவர்களுக்குத் தக்க ஸமயத்தில் தனம் கிடைக்கிறது. விவாகத்தைச் செய்து கொண்டு யாகங்களைப் பண்ணுகிருர்கள். அதஞல் ஸந்தோஷித்த தேவர்கள் அவர்களுக்கு இந்த உலகத்திலும், பரலோகத்திலும் ஸுகத்தைக் கொடுக்கிருர்கள்.

பாக்கியமில்லாத மூடர்கள் கல்வியைக் கற்காமலும், தவத்தைச் செய்யாமலும், தானத்தைச் செய்யாமலும் இருப்பதுடன் புத்ரோத்பத்தியையும் செய்யாமலும் இருந்தார்களேயாஞல் அவர்களுக்கு இவ்வுலகமும் இல்லை, பரலோகமும் இல்லை.'' என்று கூறிஞர்.

மார்க்கண்டேயர் மேலும் கூறுகிருர்:

''ஹேஹயம் என்ற தேசத்தில் ராஜ குமாரன் ஒருவன் இருந்தான். அவன் அழகும் நற்குணங்களும் நிரம்பியவன்; பகைவரின் கர்வத்தை அடக்கி அவர்களுடையபட்டணத்தை வசமாக்கிக் கொள்பவன்; மகாசூரன். அவன் வேட்டையாடுவதற்காகக் காட்டில் திரிந்து கொண்டிருந்தான். புதர் மரம் செடி கொடிகள் நிறைந்துள்ள அந்தக் காட்டில் மான் தோல் போர்த்துக் கொண்டிருந்த முனிவர் ஒருவரை அவன் கண்டான். அவரை அவன் ஒரு மிருகம் என்று எண்ணி, பாணத்தால் அடித்துக் கொன்று விட்டான்.

அவரருகில் சென்று பார்த்ததும், தான் தவருக ஒரு பிராம்மணேத் தமனைக் கொன்று விட்டதை அறிந்து பெரிதும் துக்கப்பட்டான். சோகத்தால் புத்தி கலங்கிஞன். தனது ராஜ்யத்திற்குச் சென்று, பிரஸித்தி பெற்றவர்களான ஹேஹய ராஜாக்களிடம் நடந்த விருத்தாந்தத்தை மறைக்காமல் சொன்ஞன். அதைக் கேட்டு, 'தபோதனர் ஒருவர் இவஞல் கொல்லப்பட்டுள்ளார்' என்று மனம் வருந்திஞர்கள். அவர்கள் அனைவரும் காட்டிற்குச் சென்று அந்த முனிவரைப் பார்த்தார்கள். அவர் யாரைச் சேர்ந்தவர் என்று தேடிச் சென்ருர்கள். அப்பொழுது கச்யப புத்திரரான அரிஷ்டநேமியின் ஆச்ரமத்தை அடைந்தார்கள். அவர்கள் கடுந் தவம் புரியும் அந்த மகரிஷியை வணங்கி நின்ருர்கள். அவர்களை வரவேற்றுப் பூஜிப்பதற்காக, பூஜைக்குரிய பொருள்களை அவர் கொண்டு வந்தார். அப்பொழுது ஹேஹயர்கள் ''முனிசிரேஷ்டரே! நாங்கள் செய்த குற்றத்தால் உமது பூஜைக்கு அநர்ஹர்களாக நாங்கள் இருக்கிருேம். எங்களைச் சேர்ந்த ராஜகுமாரஞல் பிராம்மணன் ஒருவன் கொல்லப்பட்டு விட்டான்.'' என்று விண்ணப்பித்தார்கள்.

மகரிஷி, ''உங்களால் அந்தப் பிராம்மணன் எவ்வாறு கொல்லப்பட்டான்? அவன் எங்கு இருக்கிருன்? சொல்லுங்கள். நீங்கள் என் தபோபலத்தை இப்பொழுது பாருங்கள்'' என்று சொன்ஞர்.

அதன் பிறகு, நடந்த விருத்தாந்தத்தை ஒன்றும் மறைக்காமல் உள்ளபடி முனிவரிடம் விண்ணப்பித்தார்கள். பிறகு இறந்து கிடந்த முனிவரின் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்து பார்க்கையில், உயிர் துறந்த அந்த முனிவரை அங்கே காணவில்லை. அங்குமிங்கும் தேடிஞர்கள்; எங்கும் காணவில்லை. மனமொடிந்து போய் வெட்கத்திஞலும், சோகத்தாலும் மிகவும் துக்கப்பட்டார்கள். அப்பொழுது கச்யப முனிவரின் குமாரரான அரிஷ்டநேமி ஹேஹய தேசத்து அரசர்களைப் பார்த்து, ''உங்களால் கொல்லப்பட்டவன் இந்தப் பிராம்மணஞக

இருக்கலாம். அரசர்களே! இவன் தபோ பலமுள்ள என்னுடைய புத்திரன்" என்றுகூறி இறந்து போயிருந்த மகரிஷியை உயிருடன் காண்பித்தார்.

அவ்வரசர்கள் ஆச்சர்யத்துடன் அந்த மகரிஷியைப் பார்த்ததும், "இது பெரிய ஆச்சர்யமாக இருக்கிறது. இவர் இவ்விடத்தில் பாணத்தால் அடிபட்டு உயிர் துறந்தார். மரித்துக் கிடந்த இவர் எவ்வாறு உயிர்ப் பெற்றார்? இவரை மறுபடியும் பிழைப்பிக்கச் செய்தது தவத்தின் மகிமையா? இதை நாங்கள் தெரிந்து கொள்ளலாமா? இதன் உண்மையை நாங்கள் அறிய விரும்புகிறோம்" என்றார்கள்.

அரிஷ்ட நேமி கூறலானார்:

"அரசர்களே எங்கள் விஷயத்தில் மிருத்யு அதிகாரம் செலுத்தச் சக்தியற்றவன். எங்கள் திறத்தில் மிருத்யு திறமை இல்லாதவனாக ஆனதற்குக் காரணத்தை யுக்தியுடன் சுருக்கமாகச் சொல்லுகிறேன். நாங்கள் சுத்தமான ஆகாரத்தையே சாப்பிடுகிறோம். ஆலஸ்ய மற்றிருக்கிறோம். சந்தியா வந்தனத்தில் முக்கிய நோக்குள்ளவர்களாக ஸ்ரீகாயத்ரீ மஹா மந்த்ரத்தை ஜபிக்கிறோம். நாங்கள் சுத்தமான ஆகாரத்தையே உட்கொண்டு சுத்தமான இடத்திலேயே வாஸம் செய்கிறோம். பிரம்மசரிய விரதத்துடன் இருக்கிறோம். உண்மையே பேசுகிறோம். பொய் பேசுவதில் மனத்தைச் செலுத்தியதில்லை. எங்களுக்குரிய தர்மத்தை அநுஷ்டிக்கிறோம்; ஆதலால் எங்களுக்கு மிருத்யு பயமில்லை. உண்மையான பிராம்மணர்களுக்கு நன்மையே செய்கிறோம். அவர்களுக்குத் தீங்கை மனத்தாலும் நினைத்ததில்லை. அவர்கள் செய்யும் நல்ல காரியங்களைப் பார்த்துச் சந்தோஷிக்கிறோம்; கொண்டாடுகிறோம். அதனால் எங்களுக்கு மிருத்யு பயமில்லை. அதிதிகளுக்கும் எங்களை அண்டி இருப்பவர்களுக்கும் அதிக ஆகாரத்தை அளித்து நன்கு புஜிக்கச் செய்து மிச்சத்தை நாங்கள் புஜிக்கிறோம். அதனால் எங்களுக்கு மிருத்யு பயமில்லை. மன அமைதியுள்ளவர்களாய், இந்திரியங்களை அடக்கிப் பொறுமையை இயற்கையாகவே கொண்ட நாங்கள் தீர்த்த யாத்திரை செய்வதிலும், தானம் கொடுப்பதிலும் மிக்க பற்றுள்ளவர்களாய்ப் புண்ணிய க்ஷேத்திரங்களில் வசிக்கிறோம். யோகத்தால் சித்தி பெற்ற மஹாத்மாக்களின் அருகில் நாங்கள் வசிக்கிறோம். அதனால் எங்களுக்கு மிருத்யு பயமில்லாமல் நலமுடன் நிறை வாழ்வு வாழ்கிறோம். ஹேஹய அரசர்களே! இவ்விஷயத்தைப் பற்றி சிறிதே கூறியுள்ளேன். நீங்கள் ஒன்றாகச் செல்லுங்கள். உங்களுக்குப் பாவத்தினின்று பயமில்லை" என்று சொன்னார்.

இதைக் கேட்ட அவ்வரசர்கள் அனைவரும் மிகுந்த ஸந்தோஷமுள்ளவர்களாய் மகரிஷியைப் பூஜித்துவிட்டுத் தங்கள் தேசத்திற்குச் சென்றார்கள்.

இந்த ரசமான விருத்தாந்தத்தின் மூலம் 'ஸதாசாரா நுஷ்டானமே சேமக் காப்பு' என்ற விஷயத்தையும், பாவ புண்ணிய பலா பலன்களையும் அதன் பலனாக ஸுக துக்கங்கள் அவரவர்களுக்கு அமைகின்றன என்ற தர்ம சூக்ஷ்மங்களையும் மார்க்கண்டேய மகரிஷி ஸாதுக்கள் சபையில் அருளினார். இதைக் கேட்ட பாண்டவர்களும், மகரிஷிகளும் மார்க்கண்டேய மகரிஷியை மிகவும் கொண்டாடினார்கள்.



## ஆறு எழுத்தில் ஆண்டவனின் ஆலயங்கள்!

"ஆறு மனமே ஆறு; அந்த ஆண்டவன் கட்டளை ஆறு"!

என்று அழகாகச் சொன்னார் கவியரசர் கண்ணதாசன். ஆம்! "ஆறு" என்ற எண்ணிற்கும் ஆண்டவனுக்கு மட்டுமல்ல ஆண்டவனின் ஆலயங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. எப்படித் தெரியுமா?

1) "சரவணபவ" என்பது "ஆறு"முகன் என்றழைக்கப்படும் முருகக் கடவுளுக்கு உரிய "ஆறு எழுத்து" மந்திரம். இது அனுதினம் ஓதிடும் மந்திரமும் ஆகும். இந்துக்களின் ஆலயங்களில் "ஆறு காலங்கள்" பூஜைகள் நடைபெறுகின்றன. வழிபாடுகளும் "ஆறு வகைப்படும்! அது மட்டுமா?

2) இந்துக்களின் "திருக்கோயிலை" ஆங்கிலத்தில்— "TEMPLE" என்கிறோம்.

3) முஸ்லீம்களின் "பள்ளி வாசலை" ஆங்கிலத்தில் "MOSQUE" என்கிறோம்.

4) கிருஸ்துவர்களின் "தேவாலயத்தை" ஆங்கிலத்தில் "CHURCH" என்கிறோம்.

4) பௌத்தர்களின் "புத்தவிகாரை" ஆங்கிலத்தில் "PAGODA" என்கிறோம்.

5) ஆங்கிலேயர்கள் தங்கள் "ஜெப ஆலயத்தை' ஆங்கிலத்தில் "CHAPEL" என்கிறார்கள்.

மேலே உள்ள எல்லா ஆங்கிலச் சொற்களிலும் இடம் பெற்றுள்ள எழுத்துக்களின் எண்ணிக்கையும் "ஆறல்லவா"? ஆச்சர்யம்! ஆனாலும் உண்மையல்லவா?

திரு. ஏ. நாகராஜன் — கடலூர்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினைச் செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம். ஆர். சாப்ரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத் கோயங்கா — சேர்மேன், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைக் குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

**செயலாட்சித்தலைவர்.**

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 9

நியதம் ஸங்கரஹித
மராகத்வேஷத: க்ருதம்|
அபலப்ரேப்ஸுனா கர்ம
யத்தத் ஸாத்விக முச்யதே ||(18-23)

"பலனில் விருப்பம் வைக்காத வாறு, பற்று இல்லாமல், விருப்பு வெறுப்பு அற்று, நியமிக்கப்பட்டுள்ள எக்கருமம் செய்யப்படுகிறதோ அது ஸாத்விகமானதென்று பகரப்படுகிறது."

சூரியன் பிரகாசிக்கிறது. சந்திரன் ஒளிர்கிறது. காற்று வீசுகிறது. இவையெல்லாம் அவற்றின் இயல்பான செயல்களாகும். அதுபோல நம் ஒவ்வொருவருக்கும் இயல்பான செயல்கள் சில உண்டு. நாம் உயிர் வாழ சுவாசிக்கிறோம். அதை நாம் எந்த வித விருப்பு வெறுப்போடும் செய்வதில்லை. நாமறியாமலேயே அது இயற்கையாக நிகழ்கிறது. குளிப்பது உண்பது உறங்குவது போன்ற செயல்கள் யாவும் நித்திய கர்மங்கள் எனப்படுகின்றன. நாம் செய்யும் நித்திய கர்மம் நமது மனப்பக்குவத்திற்கேற்ப மாறுகிறது. கே. ஜி. வகுப்பில் படிக்கும் குழந்தை கூட்டல், மற்றும் கழித்தல் கணக்குப் போடுவதற்கு ஒவ்வொரு விரலாகப் பயன்படுத்துகிறது. ஒன்பதாம் வகுப்பில் படிக்கும் அதன் அண்ணன் அப்படிச் செய்யலாகாது. அவன் கடினமான கணக்குகளையும் கூட மனதால் போட்டுவிடுகிறான். குழந்தைக்கு அது செய்வது பொருந்தும் காரணம் அதன் மனபரிபாகம் அத்தகையது. மனப்பக்குவம் கூடக் கூடச் செயலின் தரமும் கூடிக் கொண்டே போக வேண்டும்.

யுத்தம் என்பது பொதுவாகப் பார்க்குமிடத்து கொடியதுதான். அது தவிர்க்கப்பட வேண்டியதே. ஆனால் அறத்தை நிலைநாட்டும் பொருட்டு மறத்தை முறியடிக்க வேண்டிச் செய்யப்பட வேண்டிய தர்மயுத்தம் தவிர்க்க ஒண்ணாதது. எனவே அதர்ம யுத்தம் என்பது தவிர்க்கப்பட வேண்டியது. தர்ம யுத்தம் செய்யப்பட வேண்டியது. அர்ஜுனன் க்ஷத்திரியன். சூரியனுக்கு ஒளிர்வதைப் போல, நமக்கு சுவாசிப்பதைப் போல, அர்ஜுனனுக்கு யுத்தத்தில் ஈடுபடுவது இயற்கையானதொன்றாகும். அதுவும் இப்பொழுது அவன் ஈடுபட்டிருக்கும் தர்ம யுத்தம் லோக க்ஷேமத்திற்காக அவன் செய்தேயாக வேண்டிய தொன்றாகும். இந்த உத்தமமான செயலில் கொலை, உயிர்ப்பலி என்ற சொற்களுக்கே இடமில்லை.

எந்தச் செயலையும் பற்றற்று, அதாவது சுயநலப் பற்றற்று, பொது நலத்திற்காகச் செய்கையில் அது நம்மைப் பந்தப்படுத்தாது. சுயநலம் வந்து விட்டால் எத்தகைய சீரிய செயலும் பந்தத்திற்குக் காரண மாயமைகிறது. சாத்வீக சுபாவம் உள்ளவன் பெரும் பெரும் செயல்களைக்கூட சிறிதும் கர்வமில்லாமல் ஆடம்பரமும் பகட்டுமின்றி அடக்கமாகச் செய்து முடிக்கிறான். அதனால் பிறர் தன்னைப் புகழ வேண்டும் என்ற நாட்டம் கொஞ்சமும் அவனுக்குக் கிடையாது. இரவில் அனைவரும் உறங்கச் சென்ற பின்னர் அவன் தனியாகக் கொசு வலைக்குள் தியானம் செய்வான். பெரும் தொகைகளை நற்காரியங்களுக்குத் தானம் செய்யும் பொழுது கூட வலதுகை கொடுப்பது, இடது கைக்குத் தெரியாமல் அடக்கமாகக் கொடுக்கிறான். அத்தகையவர்கள் மாந்தருள் தெய்வமாவர்.

ராஜஸ கர்மம் எத்தகையது?

யத்து காமேப்ஸுனா கர்ம
ஸாஹங்காரேண வா புன: |
க்ரியதே பஹுலாயாஸம்
தத் ராஜஸ முதாஹ்ருதம் || (18-24)

"ஆசையின் வசப்பட்டவனால், அஹம்காரம் கொண்டவனால் அதிக மான பிரயாசையுடன், எந்தக் கர்மம் செய்யப்படுகிறதோ அதுவே ராஜஸ மானதெனப் பகரப்படுகிறது".

---

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

---

சாதாரண மனிதர்களாகிய நாம் பெரும்பாலும் செய்யும் காரியங்கள் ராஜஸ கர்மங்கள் எனப்படுகின்றன.

ராஜஸிக சுபாவம் உடையவன் எந்தச் செயலைச் செய்தாலும் அதனால் பிரதிபலனை எதிர்பார்க்கிறான். அவன் யாண்டும் ஆசைகளின் வசப்பட்டவனாகக் காட்சி தருகிறான். எவ்வளவுதான் பொருளைப் பெற்றாலும், எத்தனைதான் இன்பத்தை அனுபவித்தாலும் அவனுக்குப் போதுமென்ற திருப்தியே ஏற்படுவதில்லை. ஆசையெனும் தொட்டிலில் அவன் கிடக்க, புலனின்பம் எனும் வேட்கை அவனுக்குத் தாலாட்டுப் பாடுகிறது. மதுவுண்ட வண்டுபோல் அவன் காலமெல்லாம் அதில் மயங்கிக் கிடக்கிறான். இடை இடையில் சத்சங்கத்தினால், நல்லார் தொடர்பினால், நல்ல

நூல்களைப் படிப்பதால் அவனிடம் விவேகம், வைராக்கியம் போன்றவை மேகம் தோன்றுவது போல் தோன்றினாலும் ஆசையெனும் புயல் அவற்றை உடனுக்குடன் அகற்றி விடுகின்றன. பிறர் தனது செயல்களைப் பாராட்ட வேண்டும் என்று யாண்டும் அவன் எதிர்பார்க்கிறான். அவ்விதம் பாராட்டுவோர் குழு ஒன்றை அவன் எப்பொழுதும் தன்னைச் சுற்றி வைத்திருக்கிறான். அவர்களுக்காக அவன் பெயரும் பொருளையும் செலவிடத் தயங்குவதில்லை. புகழுக்கும் பெருமைக்கும் வேண்டி மிகுந்த பிரயாசையுடன் கூட அவன் விதம் விதமான செயல்களில் ஈடுபடுகிறான். எந்தச் செயலைச் செய்தாலும் 'இதன் மூலம் எனக்கு எவ்வளவு லாபம் கிட்டும்? எவ்வளவு இன்பம் கிட்டும்?' என்றே அவனது மனம் கணக்குப் போடுகிறது. செயல் தொடங்குவதற்கு முன்னரேயே அதன் பலனை அவனது மனம் அசைபோடத் தொடங்குகிறது. சிறு பலன்களை விளைவிக்கும் செயல்களாக இருப்பினும் கூட ராஜஸிக சுபாவம் உடையவன் பெரும் பிரயாசை எடுக்கத் தவறுவதில்லை. சிறிய அளவில் தானம் செய்துவிட்டு, தனது படமும் பெயரும் பத்திரிகையில் வருகிறதா என்று எதிர்பார்ப்பது அத்தகையவனது இயல்பு, அவன் செய்யும் எந்தச் செயலிலும் அஹங்காரமும், ஆணவமும் தூக்கி நிற்கும்.

தமோ குணம்மிக்க செயல் எத்தகையது என்பதன் விளக்கம் அடுத்து வருகிறது.

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாம்
அனபேக்ஷ்ய ச பௌருஷம் |
மோஹா தாரப்யதே கர்ம
யத்தத் தாமஸ முச்யதே || (18-25)

'வினையின் விளைவையும், நஷ்டத்தையும், துன்பத்தையும், தன் திறத்தையும் எண்ணிப் பாராது எந்தக் கருமம் தொடங்கப்படுகிறதோ அது தாமஸம்'

நாம் ஒரு செயலில் ஈடுபட்டால் அதன் விளைவு எப்படியிருக்கும் என்பது பற்றிச் சிந்தித்த பின்னரே அதைத் தொடங்க வேண்டும். முன் யோசனை இல்லாது தொடங்கும் செயல்கள் சுவர் பிளந்த மரத்துளையில் கால் நுழைத்துக் கொண்டு ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கின் செயலை ஒக்கும். நமது செயல் நமக்கும் பிறருக்கும் லாபத்தையும், இன்பத்தையும் அமைதியையும் அளிக்குமா என்று சிந்தித்து முடிவு எடுக்க வேண்டும். ஆனால் தமோ குணம் உடையனிடம் இத்தகைய நிதான சிந்தனை இருக்காது. அவனிடம் பரபரப்பும் படபடப்பும் யாண்டும் காணப்படும். அவனது புத்தியில் மயக்கம் காணப்படும். மோகம் அல்லது மயக்கம் வந்துவிட்டால் புத்தித் தெளிவு மறைந்துவிடும். வேகமாக விட்டில் பூச்சி பறந்து சென்று விளக்கொளியில் விழுந்து மாய்வது போல, தமோ குணம் மிக்கவன் மயக்கத்தால் உந்தப்பட்டவனாக தனது திறமையைப் பற்றிச் சிந்தியாது ஆபத்தான செயலில் ஈடுபட்டு தனது அழிவைத் தானே தேடிக் கொள்வான். வேகம் இருக்குமிடத்தில் பொதுவாக விவேகம் இருக்காது. தன்னால் ஒரு கர்மத்தைத் திறம்பட, வெற்றி கரமாகச் செய்து முடிக்க முடியுமா என்று அவன் சிந்திப்பது கிடையாது.

'எளிமையாகவும் இருக்கவேண்டும். ஆனால் அதே வேளையில் ஏமாந்தும் போய்விடக் கூடாது. பக்தனாக இருக்க வேண்டும். ஆனால் அதன் பேரில் சீடனாக இருக்கக் கூடாது.' என்பார் ஸ்ரீராமகிருஷ்ண பரஹம்ஸர்.

இதையே ஸ்ரீஞானானந்தகிரி சுவாமிகள் பின்வருமாறு நமக்குப் போதிக்கிறார்.

'சுறுசுறுப்பாயிரு ஆனால் படபடப்பாயிராதே
பொறுமையாயிரு ஆனால் சோம்பேறியாயிராதே
சிக்கனமாயிரு ஆனால் கருமியாயிராதே
அன்பாயிரு ஆனால் அடிமையாயிராதே
இரக்கம் காட்டு ஆனால் ஏமாந்து போகாதே
கொடையாளியாயிரு ஆனால் ஓட்டாண்டியாய் விடாதே
வீரனாயிரு ஆனால் போக்கிரியாயிராதே
இல்லறத்தை நடத்து ஆனால் காம வெறியனாயிராதே
பற்றற்றிரு ஆனால் காட்டுக்குப் போகாதே
நல்லோரை நாடு ஆனால் அல்லோரை வெறுக்காதே!

*(தொடரும்)*

## நற்குணமும், துர்க்குணமும்

நமது நற்குணங்களைப் புகழ்ந்து கொண்டோமானால், அதைப் போலவே நமக்குள்ள கெட்ட குணங்களையும் வெளிப்படுத்த வேண்டும். நற்குணம் இமயமலை போலிருப்பினும், துர்க்குணம் விந்தியமலை போல இருக்கும்.

— காந்தியடிகள்.

தொகுப்பு : தேனி எம். சுப்பிரமணி.

பாரதப் போரில் தன் பாஞ்ச சன்யம் என்ற சங்கை ஊதினுன் பரந்தாமன். ஏன் ஊதினுன்? என்பதற்குக் காரணம் கூறுகிறுர் திருமங்கையாழ்வார்.

பேரழகு கொண்ட பெருந்தவத்து நாயகி அந்தப் பாஞ்சாலி. அவளது கருமையான கூந்தலைக் கரம் பற்றிக் கரகரவென்று இழுத்தான் அந்தப் பாவி துச்சாதனன். நிறுத்தினுன் அவளைக் கேடுற்ற மன்னர் கொண்ட அறங்கெட்ட சபையில். அவள் அழுது துடித்தாள் அம்பு பட்ட மான் போல். நீதி கேட்டாள் அப் பெண்ணரசி தன் பெண்மை வாயால்.

உலகத்தை மறந்தாள்; ஒருமையுள்ளம் பெற்றுள்; உட் சோதியிற் கலந்தாள் அந்தப் பாஞ்சாலி.

'ஹரி ஹரி ஹரி'' என்றுள்; ''கிருஷ்ணு! அபயம் உனக்கு அபயம்'' என்றுள். 'நம்பி நின் அடி தொழுதேன்;என் மானம் அழியாது இங்குக் காத்தருள்வாய்', என்று பிரார்த்தித்து இரு கரங் கூப்பி ஸ்ரீ கிருஷ்ணனிடம் சரணடைந்தாள். தனது உடல், உயிர், உடைமை ஆகிய அனைத்தையும் அர்ப்பணித்தாள். கிருஷ்ணனுடைய அருள் துச்சாதனன் களையக் களைய வண்ண வண்ணப் பொற்சேலைகளாய் வடிந்து அப் பாஞ்சாலியினுடைய உடலில் கள் அவள் உடலில் வளர்ந்தன— அந்த மாதவன் அருளால்.

பூச்சொரிந்தார்கள் தேவர்கள். ஆவலோடு எழுந்து தலை நிமிர்ந்து நின்று கை தொழுதான் வீட்டுமன். பெருமூச்சுற்று உட்கார்ந்து தலை கவிழ்ந்தான் அரவக் கொடியுடைய துரியோதனன்.

'துச்சாதனன் செந்நீர் துரியோதனன்-ஆக்கை ரத்தம் இரண்டும் கலப்பேன்; கூந்தலில் பூசுவேன்; குளிப்பேன்; சீவிக் கூந்தல் முடிப்பேன்; அது செய்யும் முன்னே முடியேன்' என்று சபதம் செய்தாள் பாஞ்சாலி.

# சங்கம் வாய் வைத்தான்

'ஆடி விலைப்பட்ட தாதியடி நீ; உன்னை ஆள்பவன் என் அண்ணன் துரியோதன மன்னன்' என்றுன் அந்த நீசன் துச்சாதனன். மாயச் சூதாடி சகுனியின் தொழிலை தர்மத்தில் நின்று வாதாடினுள். நீதியை வலியுறுத்தவில்லை — தகுதியுள்ள வீட்டுமன். சொற்போர் தொடுக்கவில்லை—விற்போரில் திறமையுள்ள துரோணன். எனவே அட்டகாசங்கள் செய்வதில் அயரவில்லை-அற்புதத்தி படைத்த துரியோதனுதியர்கள். மனம் தளரவில்லை-தீச் செயல்களைக் கரும்பாக மென்று தின்னும் துச்சாதனன்.

'இத் தையல்தன் சேலையைக் களைவாய்', என்று ஆணையிட்டான் துரியோதனன். நிறைவேற்ற முயன்றுன் மாடு நிகர்த்த அந்த துச்சாதனன். ஆனுல் முடியாமல் முயற்சியில் தளர்ச்சியுற்றுன் அந்த துன்மதியுடையோன்.

பாய்ந்தன. தன் முயற்சியில் தளர்ச்சியுற்றுன் துச்சாதனன்.

இந்நிகழ்ச்சியினின்று உடல், உயிர், உடைமை ஆகிய அனைத்தையும் அர்ப்பணம் பண்ணுகிற பக்தனொருவனுக்கோ அல்லது பக்திமதி ஒருத்திக்கோ இறைவனுடைய அருள் உறுதியாக வந்தமைகிறதென்பது தெளிவாக உணர முடிகிறது. இக்கோட்பாடு எக்காலத்திலும் எல்லாருக்கும் பொதுவானதே.

வண்ணப் பொற்சேலைகள் அவள் உடலில் வளர்ந்தன—ஸ்ரீ கிருஷ்ணன் அருளால். பெருமக்கள் செல்வத்தின் பெருக்கினைப் போல் பொன்னுடை, பட்டாடை அவள் உடலில் வளர்ந்தன—கோவிந்தன் அருளால். நல்ல புண்ணியவாளர் தம் புகழினைப் போல் எண்ணத்திலடங்காத சேலை

அந்தச் சபதம் நிறைவேற, விரித்த கூந்தலை அவள் முடிக்க, அவளுக்காகவே பாரதப் போரில் தனது பாஞ்சசன்னியம் என்ற சங்கை ஊதினுன் பரந்தாமன் என்கிறுர் திருமங்கையாழ்வார். பெண்பாலிடத்து நடந்து கொள்ளும் பாங்கிலிருந்து ஒரு மனிதனுடைய பண்பு வெளிப்படுகிறது.

'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்', அதாவது பண்பாளர்களுடைய கண்காணிப்பில்தான் இந்த உலகம் இருக்கிற தென்பார் வள்ளுவர். கவண் வீசிக் கல்லெறிந்து குருவிகளை விரட்டித் தினைப்புனத்தைக் காவல் காப்பவர்களைப் போல், தங்கள் பார்வையாகிய கவண்வீசிக் கடுஞ் சொற்களாகிய கல்லெறிந்து, கயவர்களாகிய குருவிகளை விரட்டி, இந்த உலகமாகிய தினைப் புனத்தைக் காவல் காப்பவர்கள்—பண்பாளர்கள்.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமுலுதேசிகன்;
புதுச்செந்நெல்குளம்.

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம். (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிருன் —நஜன் | 0—50 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா (அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம்) | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர்: டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | பிரஸ்ஞேபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வரசுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலைவர் (எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

பாஞ்சாலத்தில் நிகழ்ந்த சுயம் வரத்தில் பாஞ்சாலியை வென்று எடுக்க இயலாத துரியோதனதியர் உள்ளம் உறுத்திக்கொண்டிருந்தது. அத்துடன் இராஜசூய யக்ஞத்தின் ஆடம்பரமும் அந்த உள்ளத்தைத் தாக்கிக் கொண்டிருந்தது. அதில் 'பொறுமை' என்ற எருயிட்டு, 'ஆண வம்' என்ற நீர் பாய்ச்சி 'கயமைத் தன்மை' என்ற பயிரைச் சாகுபடி செய்து, அந்தப் பயிரில் 'பாஞ்சாலி யின் துகிலுரிதல்', என்ற தானி யத்தை விளைவிக்கும் கயவர்களானுர் கள். அந்தப் பயிர்களுக்குப் பாது காப்பு வேலியாக அமைந்த மன்னர் களும் கயவர்களே. எனவே அந்தப் பயிர்களையும் வேலிகளையும் அறு வடை செய்யச் சங்கம் வாய் வைத் தான் ஸ்ரீ கிருஷ்ணன்.

பந்து பொருந்திய விரல்களையுடை யவள் பாஞ்சாலி. அதாவது கள்ளங் கபடமில்லாத விளையாட்டு புத்தி யுடையவள் பாஞ்சாலி. அவள் விரித்த கூந்தலே முடிக்கவும், யானைப் படைகளையுடைய வீரக் கழலணிந்த துரியோதனதியர்களுக்குப் பாரதப் போரில் உறுதுணையாக வந்த மன்னர் கள் மனங் கலங்கவும் சங்கு ஊதி ஞன் ஸ்ரீ கிருஷ்ணன் என்கிருர் திரு மங்கையாழ்வார்.

"பந்தார் விரலாள் பாஞ்சாலி
கூந்தல் முடிக்கப் பாரதத்து
கந்தார் களிற்றுக் கழல் மன்னர்
கலங்கச் சங்கம் வாய்வைத்தான்"
(6.7.8)

கற்புடைய பெண்டீர், பகவத் பக்தர் கள், தத்துவ ஞானிகள் ஒரு நாட் டின் பெருமை என்னும் கோட்டைக் குப் பாதுகாவலர்கள் ஆவார்கள். அவர்கள் சாதுக்கள். அவர்களைக் காப்பாற்றுவதுதான் இறைவனுடைய அவதாரத்தின் குறிக்கோள்.

*

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

இலக்ஷ்மிதேவி மண்டபத்தை ஒட்டி புக்க மடத்தைச் சேர்ந்த கட்டிடங்களும் அதற்கடுத்தாற்போல் ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதி ஒன்றும் உள்ளன. இந்த ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதி தனிப்பட்ட கோவில் என்றும் கோவிந்தராஜர் கோவிலுடன் தொடர்புடையதல்ல என்றும் தெரிகிறது.

இரண்டாவது கோபுரத்திற்கு எதிரில் நடுவில் ஒரு செய்குளமும் அதற்கு இரு புறத்திலும் மிக உயர்ந்த நான்கு தூண்களுடனும் மேலே விமானத்துடனும் கூடிய இரண்டு மண்டபங்களும் உள்ளன. வசந்தோற்சவத்தின் போது, பெருமாளும் தேவிமாரும் இங்கு ஊஞ்சல் சேவை சாதிப்பார்கள். கிழக்குப் பக்கத்தில் வேதாந்த தேசிகர் கோயிலுக்கருகிலுள்ள மண்டபம், கி. பி. 1494-இல் கொம்மராஜா சிறு திம்மராஜ உடையார் என்பவரின் மகனை மகா மண்டலேச்வர நரசராஜ உடையார் என்பவரால் கட்டுவிக்கப் பெற்றது; உற்சவங்களின்போது பிரஸாதங்களுக்கான நிவந்தங்களையும் அவன் ஏற்படுத்தினன்.

கோவிலின் இடைப்பகுதியின் வடது புறம் 'நௌபத் கானு' கட்டிடத்திற்குச் சற்றுத் தள்ளியும், தென் புறம் தனியார் கோயிலான ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதியை அடுத்தும் மாடத் தெருக்களுக்குச் செல்லும் உயர்ந்த படிக்கட்டுகள் உள்ளன. ஆம், கோவிந்தராஜரின் கோவில் நகரின் தரை மட்டத்திற்குச் சற்றுக் கீழாகவே உள்ளது.

வடது புறம் படிக்கட்டுகளை ஒட்டினற்போல் தென்கலை வைணவர்களின் ஆச்சாரியரான மணவாள மாமுனியின் கோவில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. மூலவர், உற்சவர் இருவரும் சேவை சாதிக்கின்றனர். நானூறு ஆண்டுகளுக்குமுன் வீரவல்லி குடும்பத்தைச் சேர்ந்தவர் தமது இனம் நிலத்தில் கபில தீர்த்தம் செல்லும் வழியில் ஒரு கோயில் கட்டினர் என்றும், அப்பகுதி அழிவிற்குள்ளாகவே, அவர் வமிசத்தவரான கோணப்பாச்சாரியர் என்பவர் இரு நூறு ஆண்டுகளுக்கு முன் விக்கிரகங்களை எடுத்து வந்து இப்போதுள்ள இடத்தில் பிரதிஷ்டை செய்தார் என்றும் சொல்லப்படுகிறது.

அங்ஙனமே, வடகலை வைணவர்களின் ஆச்சாரியராகிய வேதாந்த தேசிகரின் கோவில் தென் புறத்தில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. நானூறு ஆண்டுகளுக்கு முன், மாடபூசி பரம்பரையைச் சேர்ந்தவர் ஒருவர் மரத்தூண்கள் மீது கருவறையைக் கட்டி தேசிகனைப் பிரதிஷ்டை செய்ததாகவும், நூறு ஆண்டுகளுக்கு முன் பிரம்ம தந்திர ஸ்வாமி அச்சந்நிதிக்கு வடக்காக ஒரு விசாலமான மண்டபமும், அதன் முன்பு நாலுகால் மண்டபமும் கட்டியதாகவும் அறிகிறோம். கருவறையைச் சுற்றித் தூண்களின் மீது பிராகாரம் ஒன்று மாடபூசி தாமரப்பூ தாத்தாச்சார்யர் சார்பில் பிற்பாடு கட்டப்பட்டது. மூலவர், உற்சவர் விக்கிரகங்கள் உண்டு.

மேலே கிழக்கு நோக்கி ராஜ கோபுரத்தை நோக்கிச் சென்றால், தென் புறம் சின்ன ஜீயர் மடமும் வடது புறம் கோபுரத்தை ஒட்டினற் போல் அஹோபில மடமும் உள்ளன.

இராஜகோபுரத்தைத் தாண்டி கிழக்கே தேர் வீதிக்கப்பால், ஆஞ்சநேயர் கோவில் ஒன்று சிறப்புடன் விளங்குகிறது. நல்ல உயரமான ஆகிருதியுள்ள அனுமன். இது கி. பி. 1509இல் கரவட்டிப்புலி ஆழ்வார் அப்பாப் பிள்ளை என்பவரால் கட்டப் பெற்றது.

இக்கோயிலின் தென் புறமாகக் கிழக்கே சென்றால், கோவிந்தராஜ புஷ்கரிணி அல்லது கிருஷ்ணராயன் கோனேரியைப் பார்க்கலாம். கி. பி. 1522ஆம் ஆண்டின் கல்வெட்டு ஒன்றில், இப்புஷ்கரிணியின் கரையின்மீது கிருஷ்ண தேவராயரின் அதிகாரிகளுள் ஒருவரும் புகழ் படைத்த சாளுவ திம்மரசுவின் சகோதரருமான ராச்சி ராஜா என்பவரின் மகனை கோவிந்தராஜனுல் கோபால கிருஷ்ண சுவாமிக்கு ஒரு சிறு கோயில் கட்டப்பட்டதாகக் காணப்படுகிறது. கி. பி. 1530இல், அதன் கரையின் மீது ஆண்டாளின் மார்கழி நீராட்ட உற்சவத்திற்கென ஒரு மண்டபத்தை, கோவிந்தராஜர் கோயிலின் கணக்கர்களுள் ஒருவரான வில்லியார் என்பவரால் கட்டப்பட்ட விவரத்தைக் கூறும் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. ஆயினும், இக்கோனேரி பழுதுற்றது. மஹந்து பிரயாகதாஸ் அதைச் செப்பனிட்டு, கற்களினாலான படிகளையும் அழகான நீராழி மண்டபத்தையும் அமைத்தார்.

இக்கோயிலில் பிரதான தெய்வங்களுக்கும் ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் ஆகியோருக்கும் உற்சவங்கள் மிகுந்த கோலாகலத்துடன் நடத்தப் பெறுகின்றன.

கோவிந்தராஜர் தேவியருடன் உத்தர நட்சத்திரம் தோறும் மாட வீதிகளில் எழுந்தருளுகின்றார். வைகாசியில் பிரம்மோற்சவம் ஒன்பது நாள் விழாக் கண்டருளுகின்றார். காலையிலும் மாலையிலும் வெவ்வேறு வாகனங்களின் மீது பெரிய வீதிகளில் காட்சி தருகிறார். கருட சேவையும் மரத்தாலான தேரின் மீது திரு விழாவும் சிறப்பானவை. மார்கழியில் கோதண்டராமர் கோயிலுக்கு எதிரிலுள்ள இராமச்சந்திர தீர்த்தத்தின் கரைக்கு எழுந்தருளுகின்றார். பங்குனியில் புக்கோற்சவம் என்னும் நீராட்டு விழா, சித்திரையில் புன்னைக் கால்வாய் உற்சவம், ஆவணியில் மாட வீதிகளிலும் பெரிய வீதிகளிலும் உறியடி உற்சவம், தை மாதம் தெப்போற்சவம் எல்லாமே வைபவத்துடன் நடைபெறுபவை. தை மாதம் நடக்கும் ஐந்து நாள் தெப்போற்சவத்தில் முதல் நாள் கோதண்டராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரும் இரண்டாம் நாள் ஆண்

தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

காலை

## வெள்ளிக்கிழமைகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

டாளும் கண்ணனும் மற்ற மூன்று நாட்களில் கோவிந்தராஜரும் இரு தேவியரும் சேவை சாதிப்பது கண் கொள்ளாக் காட்சி.

ஆண்டாள் வெள்ளிக் கிழமை தோறும் அணிகலன்களினால் அலங்கரிக்கப்பட்டு, அழகெல்லாம் திரண்டதோர் அரிய திருக்கோலத்தில் மாட வீதிகளில் திருவீதி உலாவரும் காட்சி எத்தனை தரம் கண்டாலும் உள்ளம் நிறைவடையாது, அத்தகைய எழிற் கோலம்! மார்கழி மாதம் நீராட்டோற்சவத்தின்போது, பொழுது புலருமுன் பனியிலிருந்து பாதுகாப்பதற்கான மெல்லிய பட்டுத் துணியினால் போர்த்தப்பட்ட பல்லக்கில் இராமச் சந்திர தீர்த்தக்கரைக்கு எழுந்தருளுவதும், மாலையில் ஒவ்வொரு நாளும் நகரின் வெவ்வேறு வீதிகளில் பவனி வருவதும் கண்கள் படைத்தவர்கள் கண்டு களிக்க வேண்டிய திருக்காட்சிகள்!

ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் தத்தம் திருநட்சத்திரங்களில் விழாக் காணுகிறார்கள். இவ்விழாக்களின் போது திருமலைத் திருவேங்கடமுடையான் கோவிலிலிருந்து 'பிரஸாதப் படிகள்' வருவது ஒரு சிறப்பு. திருவிதி உலாக்களில் கோவிந்தராஜர் தேவியருடன் வர, எதிரே ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் பின்புறமாகச் செல்வது மற்றொரு சிறப்பு; ஆழ்வார்களின் சிறப்பு எல்லாம் பெருமானை வணங்கி வழிபட்டுப் பரவியதனால் தான் என்பதைக் குறிப்பதுபோல் அமைந்திருப்பதாகும்.

பல்வேறு சந்நிதிகளைக் கொண்ட மாபெரும் கோவிந்தராஜர் கோவிலிலிருந்து வெளிவரும்போது,

'கோவிந்தா! எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம்!'

என்னும் திருப்பாவையின் தனிப் பெருங்கொள்கையினை எடுத்துக் கூறும் பாசுரத்தின் அடிகளை, 'அன்ன வயற்புதுவை ஆண்டாள்' தன்னோடு, உள்ளமெல்லாம் தித்திக்க கூறத் தோன்றுகிறது அல்லவா! ★

# கீதாசாரியன் வழங்கும் உத்தரவாதங்கள்

கலங்கிக் கிடக்கும் பார்த்தனுக்குக் கீதையை உபதேசிக்கும் கண்ண பிரான் ஆங்காங்கு சில உறுதி மொழிகளைத் தருவார். அவை அர்ஜுனனுக்கு மட்டும் பரந்தாமன் வழங்கும் உறுதி மொழிகள் அல்ல. ஏன், உபதேசம் முழுமையுமே பார்த்தனை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு ஐயன் ஏனையோர் அனைவர்க்கும் அருளியதுதானே? ஆகவே உங்களுக்கும் எனக்கும் சேர்த்துப் பகவான் பகர்ந்தருளிய உத்தர வாதங்களை நாம் உரிமையோடு இங்கே ஒருங்கேக் காணலாம். பிரசித்தமான அத்தகைய ஒரு வாசகம், நாம் அனைவரும் நன்கு அறிந்தது. இங்கே ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். 'யோக க்ஷேமம் வஹாம் யஹம்' என்ற கால் அடி கண்ண பெருமானின் பக்தர்பால் உள்ள பொறுப்பை விண்டுரைக்கும் வாக்கியம் ஆகும். இது போன்ற பிற இடங்களையும் நாம் கவனிக்கலாம்.

அனன்யாஸ்சின்தயந்தோ மாம் யே
ஜநா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக
க்ஷேமம் வஹாம்யஹம் ||
(9-22)

இங்கே பகவான் 'அவர்கள் யோக க்ஷேமத்தை நான் வகிக்கிறேன்' என்பார். எவர்கள்? பதில் முதல் அடியில் உள்ளது. வேறு எதையும் சிந்தியாது, எவர்கள் என்னை வழிபடுகிறார்களோ, அவர்கள்! எப்போதுமே என்னோடு இணைந்து நிற்கும் அவர்களுடைய யோக க்ஷேமத்தை நான் கட்டிக் காக்கிறேன் — இது கண்ணபிரானின் உறுதிமொழி. வாராததை வர வழைத்துத் தருவது யோகம் ஆகும். உள்ளதைக் காப்பாற்றுவது க்ஷேமம் எனப்படும். ஆக, இவ்வாறு தம் மீது பாரத்தைப் போட்டுவிட்டு வழிபடும் அடியாரைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்பவர் கிருஷ்ணர்.

இதே அத்தியாயத்தில் 9 சுலோகங்களுக்குப் பின் இன்னும் ஒரு உறுதியான வாக்கு ஐயனிடமிருந்து எழும். என் அடியவனுக்கு அழிவில்லை என்பதாம் அது. (ந மே பக்த: ப்ரணச்யதி)

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஸஸ்வச்
சாந்திம் நிகச்சதி |
கௌந்தேய ப்ரதி ஜானீஹி ந மே
பக்த: ப்ரணச்யதி ||
(9-31)

இந்த ஈரடிகளுக்கு முன்னிருந்தே பக்தி நிரம்பிய, சாது ஆகிய தர்மாத்மாவைப் பற்றிய பேச்சு அடிபடுகிறது. தீய ஒழுக்கம் தவிர்த்து, ஈசன் மீதே சிந்தையைச் செலுத்தி வருபவன் தர்மாத்மாவாக விளங்குகிறான். அவனுக்கு நிரந்தர அமைதி கிட்டுகிறது.

இந்த இடத்தில் கண்ணபிரான் அர்ஜுனனை விழிப்பூட்டிக் கூறுவார்- குந்தி மைந்த! நன்றாகத் தெரிந்து கொள். என் பக்தன் அழிவடைவதில்லை!

இன்னும் நமக்குத்தான் வேறென்ன வேண்டும்? இறைவனின் திருவடியில் உள்ளத்தைச் செலுத்தி நின்றால், அழிவிலாப் பெருநிலையை நாம் எய்துகிறோம்!

இவ்வளவெல்லாம் சொல்லியும், சில சமயங்களில் ஐயம் தலை தூக்குவது உண்டு. அவர் எவ்வளவோ நல்லவர். ஒரு தப்புக்காரியம் செய் தவரல்ல. அப்படியும் அவர் படாத துயரங்கள் ஒன்று பாக்கியில்லை. இப்படிச் சிலபொழுது நாம் பேசுவதுண்டு. இந்தப் பேச்சு சரியன்று; இறைவனின் சர்வ நியாயமான ஆட்சியை உணர்ந்தவர்கள் பேசக் கூடிய பேச்சு அல்ல இது!

ஏனெனில் கண்ணபிரான் ஓர் இடத்தில் அடித்துக் கூறுவார். நல்லது செய்பவன் ஒரு போதும் கீழ் நிலையை அடைவதில்லை.

பார்த்த நைவேஹ நாமுத்ர
விநாசஸ்தஸ்ய வித்யதே |
ந ஹி கல்யாணக்ருத் கஸ்சித்
துர்கதிம் தாத கச்சதி ||
(6-40)

அர்ஜுனன் இதற்கு முந்திய சுலோகங்களில் ஒரு சந்தேகம் கேட்பான். இறைவனை அடைய முற்படும் அப்பாவி வெறும் மேகச் சிதறல்கள் போல, ஈசனையும் அடையாது உலகியலிலும் தவியாய்த் தவித்துத் தத்தளிக்கிற நிலைமையை அடைந்தால், என்ன பயன்? இது போன்றதொரு கேள்வியை அர்ஜுனன் தொடுக்க, எம்பெருமான் மிக அன்போடு அவனை அழைத்துப் பகர்வார்.

"அத்தகைய பேர்வழிக்கு இங்கோ அங்கோ அழிவென்பதே கிடையாது. அப்பனே! நல்லது செய்பவனுக்குத் தீய நிலை ஒருபோதும் கிடையாது".

கல்யாணக்ருத் எனில் நல்லன புரிபவன். துர்கதி என்றால் கேடு காலம்.

ஒருபோதும் (கஸ்சித்), கிடையவே கிடையாது (நஹி) என்ற இரு சொற்களால் அழுத்தம் திருத்தமாகச் சொல்வார் கீதாசாரியன்.

பக்தி யோகம் பேசப்படும் அத்தி

'நெய்வேலி நுனிப்புல்'

# பீடுடைய பிரமபுரம்

ஸ்ரீகாழி, பிரமபுரம், தோணிபுரம், வேணுபுரம், சிரபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் 12 திருநாமங்களுடன் திகழும் இத்திருத்தலம் ஆழ்வார்களால் பாடப் பெற்ற 12 திவ்ய தேசங்களையும் தன்னிடம் கொண்டு மேலும் புகழ் ஓங்கி விளங்குகிறது. அவை :

| | | | |
|---|---|---|---|
| 1. | தாடாளங் கோவில். | 7. | திருத்தெற்றி அம்பலம். |
| 2. | திருநகரி. | 8. | திருமணிக்கூடம். |
| 3. | திருநாங்கூர். | 9. | பார்த்தன்பள்ளி. |
| 4. | வைகுந்த விண்ணகரம். | 10. | திருக்காவளம்பாடி. |
| 5. | அரிமேய விண்ணகரம். | 11. | திருவள்ளகம். |
| 6. | செம்பொன் செய் கோவில். | 12. | திருத்தேவனார் தொகை. |

திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.

யாயம் 12. அங்கும் கண்ணபெருமான் இத்தகையதோர் உறுதிமொழி தருவார். அவர்களை இச்சாவுக் கடலிலிருந்து கைதூக்கி விடுபவனாக நான் உள்ளேன் என்பது ஸ்ரீகிருஷ்ண வசனம்.

எவர்கள்?

தேஷாமஹம் ஸமுத்தர்த்தா
 ம்ருத்யுஸம்ஸாரஸாகராத்।
பவாமி நசிராத்பார்த்த மய்யா
 வேசித சேதஸாம்॥
 *(12-7)*

பக்தி செய்வோர் இப்பிறவிப் பெருங்கடலில் (இது திருவள்ளுவர் வாக்கு!) அமிழ்ந்து விடாதவாறு பார்த்துக்கொள்பவர் பரமன்! ஈசனிடம் ஒன்றிய உள்ளம் படைத்தவர்க்கு முழுப் பாதுகாப்பும் உத்தரவாதம் அளித்தாகிறது. அது கூட, வெகு காலம் தாழ்ந்து அல்ல; 'நசிராத்' என்றால் சீக்கிரமாகவே என்பது பொருள்.

பார்த்தனுக்கு ஒரு துடிதுடிப்பு. காரியம் சுருக்க நடக்க வேண்டும் என்று அவனுக்கு ஒரு பரபரப்பு. அதைப் புரிந்துகொண்டு பரமாத்மாவும் பேசுவார். முன்பு க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா என மொழிந்ததும், இந்தக் காரணத்திற்காகத்தான். உடனுக்குடன் ஆவன செய்வதாகத் தெய்வம் கூறும் உறுதிமொழிகள் இவை.

பரமனிடம் பரம நம்பிக்கை பூண்டு வாழ்பவர்கள் நிச்சயம் ஈசனை அடைகிறார்கள். இதில் சந்தேகமே வேண்டாம். இதற்கும் ஒரு வாக்குறுதி வருகிறது! பக்தனுக்கு விளக்கமும் கிடைக்கிறது.

மத்கர்மக்ருன மத்பரமோ மத்பக்த:
 ஸங்கவர்ஜித:।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ
 மாமேதி பாண்டவ॥
 *(11-55)*

உண்மையான இறையடியார்க்கு இலக்கணம் என்ன?

விடை இங்கே நமக்குக் கிடைக்கிறது.

இறைவனை ஒட்டிய செயல்களையே புரிபவன்; இறைவனையே நாடி நிற்பவன்; இறைவனிடம் பக்தி செய்பவன்; வேறு ஒட்டுதல் ஏதும் இல்லாதவன். எல்லா உயிர்களிடத்தும் பகை பாராட்டாதவன்.

இவ்வளவு குணாதிசயங்களும் பொருந்தியவன் என்னை அடைகிறான், பாண்டவா என்று கூப்பிட்டுச் சொல்வார் கண்ணன்.

இனி, இறுதி உறுதிமொழியைப் பார்க்கலாம். கவலையே படாதே (மா ஸுச:) என ஐயன் அபயம் அளிக்கும் அற்புதமான இடம்! ஸர்வ தர்மான் பரித்யஜ்ய எனத் தொடங்கும் பிரசித்தமான சுலோகம்!

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம்
 ஸரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
 மோக்ஷயிஷ்யாமி மா சுச:॥
 *(18-66)*

இதற்குப் பின் கண்ணபிரான் வாக்கில் வருபவை ஆறே சுலோகங்கள்தாம். இதைக் கடைசியாகக் கூடக் கொள்ளலாம். எல்லாக் கடமைகளையும் என் மீது பாரமாக அர்ப்பணித்து விட்டு, என்னை மட்டும் நீ அடைக்கலம் புகுவாயாக. நான் உன்னைப் பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுவித்து விடுகிறேன். கவலைப்படாதே!

இதுதான் கடவுளே சொல்லிக் கொடுக்கும் கடைசி வழி. இந்த ஈரடிகளில் வரும் ஸர்வ, ஏகம் என்ற இரு சொற்களும் ஒன்றுக்கொன்று எதிர்மறை. எல்லாக் கடமைகளையும் ஈசன் மீது திருப்பிவிட்டுவிட்டு, இறைவன் ஒருவனை மட்டும் சரண்புகுதல் வேண்டும்.

இப்படிச் செய்தால், கவலைக்கிடமே இல்லை. கண்ணபெருமான் கட்டிக்காக்கத்தான் காத்திருக்கிறாரே. நாம் பாரத்தைப் போட்டுவிட்டுப் பற்ற வேண்டியதுதான் அவர் திருவடியை! மிச்சம் அவர் பொறுப்பு!





# மும்மூர்த்திகளின் முன்னோடி



தாள்ளபாக்கம் ஸ்ரீஅன்னமாசார்யா அன்று பாடிய பாடல்கள் பற்றி இன்றைய இசைக் கலைஞர்களின் கருத்து என்ன?!

மே மாதம் 13 முதல் 19ம் தேதி வரை திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருப்பதியில் நடத்திய அன்னமய்யாவின் 579வது ஜெயந்தி விழா விமரிசையாக நடைபெற்றது. இது சமயம் நடைபெற்ற இசை நிகழ்ச்சிகளின்போது சில தலை சிறந்த இசைக் கலைஞர்களை சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது.

திரு. தி. ஸ்ரீ. திருவேங்கடம் — திருப்பதி

திருவாளர்கள் நாமகிரிப்பேட்டை திரு.கே.கிருஷ்ணன்,குன்னக்குடி திரு. ஆர். வைத்திய நாதன், மஹாராஜபுரம் சந்தானம்,திரு. சி. சிட்டிபாபு, திரு. என். ரமணி போன்ற கலைஞர்கள் இவ் இசை விழாவில் பங்கேற்றவர்களில் சிலராவர்.

தி. தி. தே., ஒவ்வொரு வருடம் Annamacharya Project மூலம் அன்னமாசார்யாவின் பாடல்களை நூல் வடிவத்தில் வெளியிட, ஆராய்ச்சிகளை மேற்கொள்ள என்று பல விதங்களில் அன்னமய்யாவின் புகழ் பரப்ப பலவித முயற்சிகளில் ஈடுபட்டுள்ளது. இவை தவிர வேறு புதிய முயற்சி ஏதேனும் கூறும்படி நான் சந்தித்த கலைஞர்களிடம் கேட்டேன்.

உலக நாடுகள் முழுவதும் சென்று நம் இசையின் பெருமையைப்பரப்பிய இவர்கள் அன்னமய்யாவின் பாடல்களைப் பற்றிய தங்களது expert opinion மற்றும் அன்னமய்யாவின் புகழ் மேன்மேலும் பரவ சில புதிய முயற்சிகளையும் தெரிவித்தனர். அவை யனைத்தும் பேட்டிக் கட்டுரையாக இதோ உங்கள் கரங்களில்.

நாமகிரிப்பேட்டை திரு. கே. கிருஷ்ணன் (நாதஸ்வரம்) :

நான் தி. தி. தே. ஆஸ்தான வித்வானாக பல ஆண்டுகள் இருப்பதால்



மற்ற கலைஞர்கள் பலரைவிட முன்பே பல ஆண்டுகளாக அன்னமய்யாவின் பாடல்களை இசைத்து வருகிறேன். அன்னமய்யாவின் சங்கீர்த்தனைகள் தான் பிற்காலத்தில் வந்த சங்கீத மும்மூர்த்திகளின் கீர்த்தனைகள் மற்றும் கிருதிகளின் முன்னோடி.

ஆந்திராவில் மட்டுமின்றித் தென்னிந்திய மாநிலங்களில் இப்போது ஒரு பாடலை இசைத்தால் அது அன்னமய்யாவின் பாடல் என்று இனம் கண்டு கொள்ளும் அளவு அன்னமய்யாவின் பாடல்கள் புகழ் பெற்றுள்ளன. இதற்கு முழு முதல் காரணம் தி. தி. தே., என்று கூறினால் அது மிகையாகாது. அன்னமய்யாவின் பாடல்கள் நிச்சயமாக நாடு கடந்தும் புகழ் பெறும்.

**குன்னக்குடி திரு. ஆர். வைத்தியநாதன் (வயலின்) :**

அன்னமய்யாவின் பாடல்களில் (Bhava) பாவம் முதலிடத்தைப் பெறுகிறது. இவரது கிருதிகள் மிகவும் அருமை. இது நாள் வரை இவ்வளவு திறமையான இசைப் புதையல் நமக்குக் கிடைக்காதது நமது துரதிர்ஷ்டமே. அன்னமய்யாவின் பாடல்கள் மும்மூர்த்திகளின் பாடல்களுக்கு முன்னோடி என்பதில் யாரும் சந்தேகப்படத் தேவையில்லை.



தற்சமயம் அன்னமய்யாவின் பாடல்களுக்கு அமைக்கப்பட்டுள்ள ஸ்வரங்கள் புதிதாக வரும் கலைஞர்களுக்குச் சிறிது கடினமானதாக இருக்கிறது. சிறந்த பண்டிதர்களையும் வித்வான்களையும் கொண்டு அனைத்து பாடல்களையும் authority மற்றும் authenticityயுடன் standardise செய்ய வேண்டும்.

இது போன்ற அன்னமய்யா சங்கீத விழாக்களைத் திருப்பதியில் மட்டுமின்றி மற்ற நகரங்களிலும் நடத்துவதை வரவேற்கிறேன்.

**மஹாராஜபுரம் திரு. சந்தானம (வாய்ப்பாட்டு) :**

அன்னமய்யாவின் பாடல்களிலேயே முழு முதல் சிறப்பு பக்தி பாவம் தான். பாடல்களைப் பாடும் போது பக்தி ரசம் உருவாகிறது. அனைத்து பாடல்களுக்கும் நிலையான ராகங்களை அமைக்கவேண்டும். தெலுங்கில் மட்டுமின்றி சம்ஸ்கிருதத்திலும் அன்னமாசார்யா அரிய புலமை பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

தாளத்திற்கு முக்கியத்துவம் தரும் வகையில் பாடல்களைப் பாடியதற்காக அன்னமய்யாவை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பதங்கள் சிதைந்து போகவில்லை. பதங்களைச் சிதைக்காமல் அதே சமயத்தில் தாளத்திற்கும் முக்கியத்துவம் கிடைக்கும்படிப் பாடல்கள் அமைந்துள்ளது தனியாகக் குறிப்பிடப்பட வேண்டும்.

அனைத்து கர்நாடக இசைக் கலைஞர்களையும் அவரவரது நிகழ்ச்சிகளில் தவறாமல் ஒன்றிரண்டு அன்னமாசார்யாவின் பாடல்களைப் பாடச் செய்ய வேண்டும். இந்தியா முழுவதும் அன்னமய்யாவின் புகழ் பரப்பி வரும் தி. தி. தேவஸ்தானத்திற்கு என்னைப் போன்ற இசைக் கலைஞர்கள் சார்பில் நன்றியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.



**திருமதி. சாருமதி ராமச்சந்திரன் (வாய்ப்பாட்டு) :**

அன்னமய்யாவின் கீர்த்தனைகள் கவிதை நயம் கொண்டு விளங்குகின்றன. அருமையான மொழி வளம், அர்த்தங்கள் நிறைந்த வாக்கியங்கள், தெய்வீகமான high flown language.

அன்னமய்யா நிச்சயமாக புரந்தர தாஸர், தியாகய்யர், சியாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீட்சிதர் போன்றவர்களின் முன்னோடி என்பது அவரது



பாடல்களிலிருந்து திட்டவட்டமாக நிரூபணமாகிறது.

தி. தி. தே., அன்னமய்யாவின் பாடல்களை தற்சமயம் ஆந்திராவில் மட்டும்தான் பரப்பி வருகிறது என்று நினைக்கிறேன். ஆனால் அடுத்த படியாக முதலில் தென்னிந்திய மாநிலங்களிலும், பிறகு வட இந்திய மாநிலங்களிலும் அன்னமய்யாவின் பாடல்களைப் பரப்ப வேண்டியது அவசியம்.

திரு. சி. சிட்டிபாபு (வீணை) :

சங்கீத மும்மூர்த்திகளும், புரந்தர தாஸர், இராமதாஸர் போன்றவர்களும் அன்னமாசார்யாவின் சங்கீர்த்தனைகளை அடிப்படையாகக் கொண்டுதான் கீர்த்தனைகளை இயற்றியிருக்கின்றனர்.

தியாகராஜர் இசையை அடைய ராகத்தை பயன்படுத்தினுரென்றால் அன்னமாசார்யா இசையை அடைய பக்தியையே பயன்படுத்தினர்.

அன்னமாசார்யாவின் பாடல்கள் எவ்வளவோ சிறப்புகள் பெற்றிருந்தும் தி. தி. தே., ஆயிரக் கணக்கில் பணம் செலவழித்தும் என்ன பயன்! திருப்பதியின் ஜனத்தொகை 3½ லட்சத்திற்கும் மேல். ஆனால் இந் நிகழ்ச்சிக்கு 400 அல்லது 500 ரசிகர்கள்தான் வந்துள்ளனர்.

தற்சமயம் நடைபெறும் திட்டங்களுக்குப் பொது மக்கள் சரியான ஆதரவு தரவில்லை. அப்படியிருக்கும் போது மேலும் புதிய திட்டங்கள், முயற்சிகள் பற்றி பேசுவது சரியா? என்று எதிர் கேள்வி கேட்டுவிட்டு புறப்பட்டு விட்டார் சிட்டிபாபு அவர்கள்.

Dr. N. ரமணி (புல்லாங்குழல்) :

அன்னமாசார்யாரின் பாடல்களை வாய்ப்பாட்டு கலைஞர்களால் மேலும் பிரபலம் அடையச் செய்ய வேண்டும். அப்போதுதான் என்னைப் போன்று பல்வேறு வாத்தியங்களில் இசைக்கும் போது ரசிகர்களால் அந்த அந்த கீர்த்தனைகளை இனங்கண்டு கொண்டு முழுமையாக ரசிக்க முடியும் என்று நினைக்கிறேன்.

அன்னமய்யாவின் சாஹித்யங்கள் மிகவும் sensitive ஆக இருக்கின்றன.

சிறந்த வித்வான்களைக் கொண்டு பாடல்களுக்கு நிலையான ராகங்களை உருவாக்க வேண்டும். இது தனி ஒரு மனிதனால் முடியாத காரியம். தி. தி. தே., ஒவ்வொரு வித்வானிடமும் 100 அல்லது 200 கீர்த்தனைகளை ஒதுக்கி எல்லா பாடல்களையும் finalise



செய்ய இப்போதாவது முயற்சி செய்ய வேண்டும்.

அன்னமய்யாவின் புகழ் பரவ இசை நிகழ்ச்சிகளின் தேவை எவ்வளவு முக்கியமானதோ அதே போல கருத்தரங்குகளும், மகாநாடுகளும் கூட மிகவும் அத்யாவசியமானது என்பதை நாம் உணர்ந்து செயல்பட வேண்டும்.

முடிவுரை :

நான் சந்தித்து உரையாடிய அனைத்து கலைஞர்களும் ஒருமனதாக அன்னமய்யாவை சங்கீதத்தின் முன்னோடியாகக் கூறிச் சிறப்பித்தனர். இதுநாள் வரை நிலவி வரும் மற்ற சங்கீத கர்த்தாக்களின் கீர்த்தனைகளுடன் ஒப்பிடும்போது அன்னமய்யா கீர்த்தனைகள் எவ்விதத்திலும் குறைந்து போகவில்லை. இன்னும் சொல்லப்போனால் பலவகைகளில் மேலும் சிறந்து விளங்குகிறது என்பதை அனைவரும் குறிப்பிட்டனர்.

அன்னமாசார்யாவின் பாடல்களில் பக்தி பாவம், இறையுணர்வு, தாளச் சிறப்பு, மொழிவளம், இசை வளம் என்று அனைத்தும் சிறப்பாக அமைந்துள்ளன.

15ம் நூற்றுண்டில் வாழ்ந்த அன்னமய்யா எழுதிய 32,000த்திற்கும் அதிகமான கீர்த்தனைகளுள்



நமக்கு கிடைத்தது சுமார் 12,000 கீர்த்தனைகள் மட்டும்தான். இவற்றிலும் ஒரு சில நூறு பாடல்களை மட்டுமே இசைக்கலைஞர்கள் பாடி வருகிறார்கள்.

கிட்டத்தட்ட நான்கு நூற்றாண்டுகள் புதைந்து கிடந்த அன்னமய்யாவின் இசைச் செல்வம் 1922-ம் ஆண்டுதான் வெளியுலகத்திற்கு கிடைத்தது. அப்போதிருந்து தி. தி. தே., பல வகைகளில் அன்னமய்யா பாடல்களின் புகழ் பரப்ப பல முயற்சிகளை எடுத்து வந்துள்ளது. ஆயிரங்கள், லட்சங்கள், செலவாகியுள்ளன.

அன்னமய்யாவின் பாடல்கள் நம்மிடம் உரிய இடத்தை பெறவில்லையோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஏதோ நாம் ஆதரித்தால் தான் உண்டு என்று நினைக்கக் கூடாது. 400 ஆண்டுகளுக்குப் பிறகும் அன்னமய்யாவின் இசை அழியாமல் வாழ்ந்துள்ளது. இனி மேலும் வாழும்.

காலத்தினால் அழிக்க முடியாத அளவு சிறப்புள்ள இசைச்செல்வம் நம்மிடம் இருக்கிறது. இதை மேலும் வளர்த்து, ஆதரித்து, மேன்மை பெறச் செய்வது நமது கடமை.

அன்னமய்யாவின் மாபெரும் பொக்கிஷத்தைப் பாதுகாப்போம்; மேன்மேலும் வளர்ப்போம்; உலகம் முழுவதும் அன்னமய்யாவின் கீர்த்தனைகளை எதிரொலிக்கச் செய்வோம். ★

4-ம் பக்கத் தொடர்ச்சி

மற்றைய செய்திகள் :

1987-88ம் ஆண்டுக்கான திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் வரவு செலவுத் திட்டம் ரூ. 77 கோடி உபரி வருமான திட்டமாக அமைந்துள்ளது.

திருமலையில் யாத்திரிகர்களுக்கான குடில்கள் ஒதுக்கீடு முறை 'கம்ப்யூட்டர்' மூலமாக விரைவில் செயல்படும். இதற்கு ரூ. 50 முதல் ரூ. 60 இலட்சம் ஒதுக்கப்படும்.

ஆந்திர மாநிலத்தில் 300 மண்டலங்களில் ரூ. 2 கோடி செலவில் 300 தி. தி. தே. திருமண மண்டபங்கள் கட்டப்படும்.

ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. குமுத்பென் ஜோஷி அவர்கள் 28-4-87 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார். திருமலையில் அண்மையில் தி. தி. தே. மேற்கொண்ட 'திருமலை காடுவளர்ப் புத்திட்டத்தினை'ப் புகழ்ந்து பாராட்டினார்.

சமயக் கோடைப் பள்ளி :

தி. தி. தேவஸ்தானத்தின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பாலமந்திர வளாகத்தில் சமயக் கோடைப்பள்ளி ஒன்று துவங்கியது. இப்பள்ளிக்கு ஆந்திர மாநிலத்திலிருந்து 50 ஆசிரியர்கள் கலந்து கொண்டனர். 16-5-87 முதல் 30-5-87 வரை நடைபெற்ற இக் கோடைப்பள்ளியின் துவக்க விழா 16-5-87 அன்று நடைபெற்றது. விழாவிற்கு வருகை புரிந்தோரை சமஸ்தாவின் உள்ளூர் அமைப்பாளர் திரு. எம். வி. எஸ். சாஸ்த்திரி அவர்கள் வரவேற்றார். சமஸ்தாவின் செயலாளர் திரு. எஸ். லக்ஷ்மணய்யா நாயுடு அவர்கள் தன் ஆண்டறிக்கையில் சமஸ்தா நிகழ்ச்சிகளுக்காக 1987-88க்கென ரூ. 47 இலட்சம் ஒதுக்கப்பட்டதாகக் கூறினார். பின்னர் இக்கோடைப்பள்ளியினை, தி. தி. தே. பாதுகாப்பு மற்றும் கண்காணிப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெயசந்திரா அவர்கள் துவக்கி வைத்தார். இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஐ. எல். என். சாஸ்திரி அவர்கள், கோடைப்பள்ளியில் பங்கேற்ற ஆசிரியர்களுக்குச் சமயப் புத்தகங்களை இலவசமாக தி. தி. தே. சார்பில் வழங்கினார்.

மாநாட்டுக் கருத்தரங்கு :

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையின் ஆதரவில், பல்கலைக் கழக வளாகத்தில் 2-5-87 மற்றும் 3-5-87 தேதிகளில் 'அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர்' மன்றத்தின் 19வது மாநாட்டுக் கருத்தரங்கு வெகு விமர்சையாக நடைபெற்றது. 2-5-87 அன்று, இக்கருத்தரங்கு மாநாட்டினை தமிழ்நாடு கல்வி மற்றும் சட்ட அமைச்சர் திரு. சி. பொன்னையன் அவர்கள் துவக்கி வைத்தார். அதற்கு முன்னர், திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர். பொன். சௌரிராஜன் அவர்கள் கூட்டத்தினரை வரவேற்றார். அமைச்சரவர்கள் தம் திறப்புரையில், நாட்டின் சமூக, பொருளாதார, விஞ்ஞான வளர்ச்சிக்கு வித்திடும் வகையில் தமிழ் மொழியினைச் செம்மையுறச் செய்விதிலும், வளம் பெறச் செய்வதிலும் தமிழ் அறிஞர்கள் தங்கள் புலமையினைப் பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, ஜெர்மெனியரும், ஜப்பானியரும் தொழில் துறையிலும், சீன மக்கள் விவசாயத் துறையிலும் மேம்பட அவர்கள் தாய் மொழி எவ்வகையில் துணை புரிந்திருக்கின்றது என்பதை சுட்டிக் காட்டிப் பேசினார். தொடர்ந்து பேசுகையில் சமுதாயத்திற்கு உதவிடும்போதுதான் ஒரு மொழியில் மறுமலர்ச்சி ஏற்படுகிறது என்றும் கூறினார். பின்னர் இவ்விழாவில் பல வகைகளில் பங்கேற்ற வள்ளல் வி.எம். பாண்டுரங்க அய்யா உள்ளிட்டு பல தமிழ் அறிஞர்களைப் பொன்னாடைப் போர்த்தி, நினைவுக் கேடயம் அளித்துக் கௌரவித்தார். பிறகு திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணை வேந்தர் முனைவர். ஜி. என். ரெட்டி அவர்கள் தனது கருத்தரங்கு சிறப்பு உரை ஆற்றினார். அன்று மாலையும் அடுத்த நாளும் பல்வேறு தலைப்புகளில் டாக்டர். நா. நஞ்சிவி, டாக்டர். ச. அகத்தியலிங்கம், டாக்டர். ந. சுப்பு ரெட்டியார் உள்ளிட்டு பல தமிழ் பெருமக்கள் உரையாற்றினர்.

*

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

